*Kumaraṉ*
*Āram 19, muttu 20*
*January 01, 1942*

Record no. 313

REGD. NO. M. 1823. 10 பக்கங்கள். KUMARAN WEEKLY.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஒன்று 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது. — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 19 | காரைக்குடி விஷு-ஞு மார்கழி-மீ 18-உ (1—1—42) | முத்து 20

## பாடகர்கள் கவனிப்பார்களா?

(திரு. மா. அருணசல முதலியார், பொன்மலை)

ஒருவர், பிரபல ஆங்கில ஆசிரியரான டாக்டர் ஜான்சனைப் பார்த்து "சங்கீதம் கற்பதற்கு மிகவும் கஷ்டமான கலை அல்லவா?" என்ருராம். அதற்கு ஜான்ஸன் "ஆம்; உண்மைதான். ஆனல் அது கற்கவே முடியாத கலையா யிருந்தால் இன்னும் விசேஷமாயிருக்கும்" என்று பதிலளித்தாராம்.

சங்கீதம் கற்கக்கூடிய கலையா யிருந்தாலும் சரி, அல்லது கற்க முடியாத கலையா யிருந்தாலும் சரி அதைப் பற்றி நமக்குக் கவலையில்லை. சங்கீதத்தை ரஸிக்கக்கூடிய ஞானம் மட்டும் நமக்கிருந்தால் போதும். நாம் கேட்கும் சங்கீதத்தில் நல்ல அம்சம் எது, கெட்டது எது என்று பகுத்தறியும் சக்திதான் விசேஷம்.

பாடகர் ஒருவர் பாடுகிருர். பாட்டு சுகமில்லை என்று வைத்துக் கொள்வோம். அந்தப் பாட்டை நாம் கேட்கும்போது ரஸமில்லை என்று சொல்லுகிருேம். அப்படிச் சொல்லும் பொழுது பாடகர் நம்மைப் பார்த்து "நீர்தான் ரஸபாவத்துடன் பாடுமே பார்க்கலாம்" என்று கேட்கவும் மாட்டார்; அப்படிக் கேட்டு விடுவார் என்று நாம் பயப்பட வேண்டியதுமில்லை.

"இன்று சாப்பாடு நன்ருக இல்லை" என்ருல் "நீங்கள் தான் சமையல் செய்யுங்களேன் பார்க்கலாம்" என்று சமையல்காரன் சொல்லுவானு என்ன? நல்ல சாப்பாடாக இருந்தால் நாக்கை சப்புக் கொட்டி 'பேஷ்' என்று சொல்லிக் கொண்டு சாப்பிடுகிருேம். அதே போல் நல்ல சங்கீதமாயிருந்தால் தாளத்தைப் போட்டுக் கொண்டும், தலையை ஆட்டிக்கொண்டும் அநுபவிக்கிருேம், அவ்வளவு தானே!

ஒரு நல்ல சங்கீதக் கச்சேரியை அநுபவிக்க வேண்டுமானல் கீழ்க்கண்ட அம்சங்கள் பொருந்தி யிருந்தால் தானே நன்ருக விருக்கும்?

சங்கீதம்
1 சாரீரம் — 2 சாஹித்யம் — 3 பாட்டு

### (1) சாரீரம்

1. சுக சாரீரம்
2. கம்பீரம்
3. சாரீரத்தில் ஜீவன்
4. சபை நிறைந்த குரல்
5. இரட்டை நாத சாரீரம்
6. கன சாரீரம்
7. நல்ல காத்திரம் வாய்ந்தது
8. கிச்சுக் குரலில்லாமல் நயமுள்ளது.
9. குழைவுகள்-கார்வைகள்-ரவைகள் உள்ளது.

### (2) சாஹித்தியம்

1. பாடுகிறவருக்கும் கேட்கிறவர்களுக்கும் புரிகிற பாஷையி லிருத்தல்.
2. பாவமுள்ள சாஹித்யத்தைப் பொறுக்கி யெடுத்தல்.
3. அர்த்த புஷ்டியுள்ளதா யிருத்தல்.
4. பக்தி ரஸ சாஹித்யம்.
5. கீர்த்தனங்கள்.
6. பதங்கள்.
7. எளிமையான சாஹித்யங்கள்.
8. தேசீயப் பாட்டு.
9. நாட்டுப் பாடல்கள்.

### (3) பாட்டு

1. சாஹித்யத்துக்குப் பொருத்தமான கர்நாடக சங்கீத மெட்டுகளை அமைத்தல்.
2. விருத்தங்களுக்குப் பொருத்தமான கர்நாடக ராகங்களை அமைத்தல்.
3. காலத்திற்குத் தகுந்த ராகத்தில் பாடுதல்.
4. ஸ்ருதியுடன் சேர்ந்து பாடுதல்.
5. லயத்துடன் சேர்ந்து பாடுதல்.
6. அக்ஷர சுத்தமாகப் பாடுதல் (அக்ஷரங்களை விழுங்கி விடப்படாது).
7. பதம் பிரித்துப் பாடுதல்.
8. ஒழுங்கான உச்சரிப்பு.
9. இலக்கண வரம்பை மீருமலும் மனேதர்மத்தை விடாமலும்பாடுதல்
10. ராகபாவத்துடன் பாடுதல்.
11. சாஹித்யத்தின் பொருளை உணர்ந்து, அநுபவித்து, அர்த்த பாவத்துடன் பாடுதல்.
12. விருத்தம் பாடும்போது சொற்களை அப்படி அப்படியே அந்தரத்தில் தொங்க விட்டு விட்டு ராகவிஸ்தாரத்திலேயே சஞ்சாரம் செய்யாமல் சாஹித்யத்துடன் இசை பின்னியிருத்தல்.
13. சொல்லின்பம், பொருளின்பம், இசையின்பம் இவைகள் ரஸபாவத்துடன் கலந்து பெருகுதல்.
14. கேட்பவர்களுக்கு விரஸ மேற்படாமல் பொருத்தமான சங்கதிகள் போடுதல்.
15. பாடின அப்புறம்—கேட்பவர்களுக்கு ரொம்ப நேரம் பாட்டின் இசை காதில் தொனித்துக்கொண்டு விஸ்ராந்தியான ஆனந்தம் ஏற்படும்படியிருத்தல்.
16. பாட்டின் வார்த்தைகளில் நின்று அந்த வார்த்தைகளுக்கு உயிர் கொடுக்கும் முறையில் பாடுதல்.
17. பாட்டில் விருவிருப்பு ஏற்படல் (அருவருப்பல்ல).
18. கேட்பவருக்கு உணர்ச்சி உண்டாகும்படி ஹிருதய பாவத்துடன் பாடுதல்.
19. பாடும் போது கோரணி காட்டாதிருத்தல்.
20. லாடு பிடித்தல், பட்டம் விடல், ஏந்திரம் சுற்றல், பிசாசு ஆடல் முதலிய அங்க சேஷ்டைகள் இல்லாமல் பாடுதல்.
21. நெரடான பல்லவிகளைச் சிட்டா செய்து கொண்டு ஹா ஹீ ஆர்ப்பாட்டத்துடன் பாடாதிருத்தல்.
22. பாட்டில் தேசிகம் கலக்காதிருத்தல்.
23. கமகங்கள், பிர்க்காக்கள், பிடிகள், வேலைப்பாடுகள், பிரஸ்தாரங்கள், விந்யாசங்கள். இழைப்புகள்-இவைகளை அளவுக்கு மீருமல் காட்தல்.
24. பக்க வாத்தியங்கள் பாடகருக்குச் சாதகமாயிருந்து ஒத்துழைத்தல்.
25. பக்க வாத்தியங்கள் பாடகரின் பாணியில் ஐக்கியப்படுதல்.
26. மங்களமும் தமிழில் இருத்தல்.

## ஆர்யப் பெண்கள் மகாநாடு

சென்னை முதலாவது ஆர்யப் பெண்கள் மகாநாடு டிசம்பர் 26-ந் தேதி மாலை ஆர்ய ஸமாஜ் ஹாலில் ஸ்ரீமதி வி. டி லக்ஷ்மி தலைமையில் நடைபெற்றது. ஹிந்து சமூகம் விருத்தியடைய வேண்டின், குழந்தை விவாகம், கட்டாய வைதவ்யம், ஸ்திரீகள் சொத்துரிமை பெறுவதற்கான தடைகள் முதலியன அகற்றப்பட வேண்டும் என்று அவர் தெரிவித்தார். பெண் கல்வி அபிவிருத்தி, சமூக சம்பந்தமாகவும், மத சம்பந்தமாகவும் உள்ள தீமை தரும் பழக்கங்களை ஒழித்தல் ஆகியவை பற்றிப் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## வாஷிங்டனில் சபை, ராணுவ, கடற்படைத் தலைமைத் தளம்

'நியூஸ் கிரானிகிள்' நியூயார்க் நிருபர் கூறுவதிலிருந்து அங்கு நேச தேச ராணுவ தந்திரத்தைப்பற்றி விவாதம் நடந்துகொண்டிருக்கிறது என்றுதெரிகிறது. இதன்பலனகப்பின்கண்ட காரியங்கள் நடக்கும் என்று நம்பப்படுகிறது: 1. நேசதேச தலைமைத் சபைக் கௌன்சில் ஒன்று வாஷிங்டனில் ஏற்படும். நேசதேச நாடுகளின் சபைத் தேவைகளை ஒன்ருகப் பிணைப்பது இவர்களின் முதல் நோக்கமாயிருக்கும். 2. ஒரு ராணுவ, கடற்படைத் தலைமைக் காரியாலயம் ஏற்படும். உலகமெங்கும் அச்சு நாடுகளை எதிர்ப்பது அதன் வேலை. 3. யுத்தம் புரிந்துகொண்டிருக்கும் நேச தேசங்களுக்கிடையில் ஒரு ஒப்பந்தம் ஏற்படும். யுத்தத்துக்குப் பிறகு உலகத்தில் சுதந்தரத்தையும், ஒழுங்கையும் நிலைநாட்டுவதைப் பற்றிய வழிகள் ஆராயப்படும்.

## ஸ்ரீ சேதுராமன் தாய்நாடு பிரயாணம்

கொழும்பு தனவைசிய இளைஞர் சங்கம், நேரு கழகம் ஆகிய ஸ்தாபனங்களின் தலைவரும், பிரபல எழுத்தாளரும், சிறந்த தேசிய வாதியுமான திரு. எம். ஆர். சேதுராமன் செட்டியார் இண்டோ சிலோன் எக்ஸ்பிரசில் டிச. 21-உ ஆவினிப்பட்டி பிரயாணமானுர். அன்னுரை வழியனுப்புதற்காக புகைரத நிலையத்தில் எண்ணற்ருேர் குழுமியிருந்தனர். தனவைசிய இளைஞர் சங்கம், சரஸ்வதி வாசகசாலை, நேரு கழகம், சேவா சங்கம் ஆகிய ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் ஸ்ரீ சேதுராமனுக்கு மலர் மாலைகள் அணிவித்தனர்.

## வா. தி. பஞ்சாக்ஷர முதலியார் அவர்களுக்கு நீத்தார் கடன்

வாலாஜாபாத்இந்துமதப் பாடசாலையின் காப்பாளர் திரு. வா. தி. பஞ்சாக்ஷர முதலியார் அவர்கள் சென்ற 3-12-41 அன்று காலமாயினமைக்கு இறுதி வழிபாடு 21-12-41ல் வாலாஜாபாத்தில் சென்னைப் பேராசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களால் நடத்துவிக்கப்பட்டது. ஜில்லா கல்வித் துறைத் தலைவர் திரு ச. சச்சிதானந்தம் பிள்ளை பி. ஏ., எல். டி. அவர்கள் தலைமை ஏற்ருர்கள். திரு வி. க. அவர்கள் நீத்தார் வழிபாடு செய்து நடு கல் நாட்டினுர். திருப்பதி மகந்து உயர்தரப் பாடசாலை தலைமை ஆசிரியர் மணி. கோடீஸ்வர முதலியார் பி. ஏ., எல். டி., அவர்கள் "நிலையாமை" என்பதுபற்றிப் பேசினுர். பின்னர் நீலாவதி அம்மை அவர்களும் பேசினுர்கள். பின் பஞ்சாக்ஷர நினைவு மலர் செயலாளர் நா.ப.தணிகை அரசு அவர்களால் வெளியிடப்பெற்றது.

பிற்பகல் 3 மணிக்கு வள்ளலார் இல்லத்தில் திவான்பகதூர் கெ. தெய்வசிகாமணி முதலியாரவர்கள் தலைமையில் இந்துசமய அறநிலையப் பாதுகாப்பாளர் கழகத் தலைவர் திவான்பகதூர் டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்களால் இறந்தாரது திருவுருவப் படம் திறந்துவைக்கப்பெற்றது. அவ்வமயம் சென்னை ஆசிரியர் மா. இராசமாணிக்கம் பிள்ளை பி.ஓ.எல். அவர்கள் 'தமிழ் மரபும் நீத்தார் கடனும்' என்பதுபற்றியும், திரு வி. க. அவர்கள் 'மரணத்திற்குப் பின் மனிதர் நிலை' என்பதுபற்றியும் பேசினுர்கள். திரு வா. தி. மாசிலாமணி முதலியாரவர்கள் நன்றி கூறக் கூட்டம் நிறைவேறியது.

## ராஜா சர் அவர்களுக்கு வரவேற்பு

### சிதம்பரம் நகர சபையார் உபசாரம்

24-12-41 அன்று காலை 9 மணிக்குச் சிதம்பரம் நகர சபையார், நகர சபைக் காரியாலயத்தில் கனம் செட்டிநாடு ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார் அவர்களுக்கு, அவர்களது ஷஷ்டியப்த பூர்த்தியைப் பாராட்டி ஒரு உபசாரப்பத்திரம் படித்துக் கொடுத்து வரவேற்ருர்கள். அன்று காலை கனம் ராஜா அவர்கள் நகர சபை வாயிலை அடைந்ததும் சபையார் ராஜா அவர்களை வரவேற்று மாலை சூட்டி வாத்திய கோஷங்கள் முழங்க நகர சபை மண்டபத்துக்கு அழைத்துச் சென்ருர்கள். நகரசபைத் தலைவர் ஸ்ரீமான் என். சீனிவாச ரெட்டியாரவர்கள் உபசாரப்பத்திரம் படித்து அழகிய, வேலைப் பாடமைந்த வெள்ளிச் சட்டத்தில் அமைத்துக் கொடுத்தார்கள். அதில் கனம் ராஜா அவர்கள் கல்வியபிவிருத்தி, இசைத் தமிழ் அபிவிருத்தி முதலிய பல்வேறு துறைகளில் ஆற்றிவரும் தொண்டினையும், காட்டும் ஊக்கத்தையும், அவற்றிற்கு உதவிவரும் வள்ளற்றன்மையையும் பாராட்டி, அவர் நீடூழி வாழவேண்டுமென்று பிரார்த்தித்தனர். கனம் ராஜா ஸர் அவர்கள் உபசாரப் பத்திரத்துக்குப் பதிலளிக்கும் போது, அடியில் வருமாறு குறிப்பிட்டார்கள்:—

அண்ணுமலை சர்வகலாசாலையைக் குறித்து உங்களது உபசாரப் பத்திரத்தில் விஸ்தாரமாகச்சொல்லியிருக்கிறீர்கள். இந்த சர்வகலாசாலையை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணம் எனக்குத் தோன்றியகாலம் முதல் இன்று வரை அதில், இந் நகர வாசிகள் இடைவிடாது காட்டி வந்த கவனத்திற்கு நான் மிகவும் நன்றி பாராட்டுகிறேன். இந் நகரவாசிகளின் ஆதரவன்னியில் இந்த சர்வகலாசாலை இவ்வளவு சீக்கிரமாயும் இவ்வளவு நேர்த்தியாயும் அமைந்திருக்க முடியாது. அண்ணுமலை சர்வகலாசாலையின் ஸ்தாபனம், அதன் வளர்ச்சி, அதன் நற்பெயர் இவைகளில் நீங்கள் ஆரம்பம் முதல் இன்றுவரை புரிந்து வந்திருக்கிற உதவியை நான் ஒருநாளும் மறக்க மாட்டேன்.

சிதம்பரமும் ஒரு சர்வகலாசாலையை வகிக்கப் பொருத்தமான ஸ்தலம். இது ஒரு புண்ணிய க்ஷேத்திரம். புராதன நகர். புண்ணிய புருஷர்கள் வாழ்ந்து வந்த பூமி. இங்கே உண்டான இச்சர்வகலாசாலையானது தமிழ் நாட்டில் வித்தைக்கும் விசால புத்திக்கும் வழிகாட்டியாக விளங்கும் ஓர் பிரகாசம் நிரம்பிய தீபமாக இருக்க வேண்டுமென்பதே எனது பிரார்த்தனை.

### விருந்துகள்

அன்று மாலை நேரு பார்க்கில் நகரசபையார் ஒரு தேனீர் விருந்தும், இரவில் ஸ்ரீமான்கள் என். ஏ. நாயனு நாயுடு அவர்களும், ஏ. வி. சாமிநாத பிள்ளை அவர்களும் அறுசுவை உண்டி விருந்தும் சிறப்பாக அளித்து கனம் ராஜா ஸர் அவர்களை உபசரித்தார்கள்.



## காகிதச் செலவில் சிக்கனம்

மொத்தம் இந்நாட்டில் செலவாகும் காகிதத்தில் ஆறில் ஐந்து பாகம் பொதுமக்களால் செலவிடப்படுகிறதாம். வெளியிலிருந்து காகிதம் மிகக் குறைவாக வருவதாலும், பொதுஜனங்கள் உபயோகிக்கும் சாதாரணக் காகித உற்பத்தி குறைந்து விடுமெனத் தெரிவதாலும் பொதுமக்கள் காகிதத்தைச் சிக்கனமாக உபயோகிக்க வேண்டுமென்று மத்திய சர்க்கார் ஒரு அறிக்கை மூலம் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். சர்க்கார் இலாகாக்களிலும் சிக்கனத்தைக் கையாள உத்தேசித்திருக்கின்றனர். மத்திய சர்க்கார் நூற்றுக்கு 25 வீதம் செலவைக் குறைத்துக் கொண்டு மாகாண சர்க்கார்களையும் அவ்விதமே செய்ய வேண்டுமென்று உத்தரவிட்டிருக்கிருர்கள்.

## பருத்திக் கிடங்கில் தீ விபத்து

பம்பாய்க்கு அருகிலுள்ள சீவ்ரி என்ற விடத்திலுள்ள பருத்திக் கிடங்கில் டிசம்பர் 25-ந்தேதி ஒரு தீ விபத்து ஏற்பட்டது. சுமார் ஒரு லக்ஷம் ரூபாய்க்கு மேல் சேதம் ஏற்பட்டதாக மதிப்பிடப்படுகிறது.

## நாணயங்களைச் சேர்த்து வைக்கக் கூடாது

நாணயங்களைச் சேர்த்து வைப்பது பாதுகாப்புச் சட்டப்படி குற்றமாகும் என்று இலங்கை சர்க்கார் அறிவித்துள்ளனர்.

## இந்தியாவில் துப்பாக்கிகளும் ரைபிள்களும்

நவம்பர் மாதத்தில் இந்திய ஆர்டினஸ் பட்டறைகளில் துப்பாக்கிகளும் ரைபிள்களும் எப்போதையும்விட அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டன. கணக்குக் கருவிகள் காரியாலயத்தில் சமபக்க தூரதிருஷ்டிக் கண்ணுடிகளும் எப்போதையும்விட அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டன. ஒரு உலோக, எஃகுப் பட்டறையில் முதல் தடவையாக ஆறு பௌண்டு பீரங்கிக் குழாய் ஒன்று திருப்திகரமாக உற்பத்தி செய்யப்பட்டது. கிழக்குத் தொகுதித் திட்டத்தின்கீழ் துப்பாக்கிகள், மெஷின் பீரங்கிகள், ரைபிள்கள் முதலியன உற்பத்தி செய்வதற்கு இது வழிகோலியதாகும். வங்காளத்தில் ஒரு கம்பெனி செய்த அக்னிக் குண்டு பரிக்ஷிக்கப்பட்டதில், திருப்திகரமாக இருக்கிறது என்று தெரிந்தது. இந்தக் கம்பெனி இப்பொழுது அக்னிக் குண்டுகள் தயாரிக்க ஆரம்பித்திருக்கிறது. இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்ட 'பேசட்' டிராலர் கப்பல்களில் இன்னும் இரண்டு சமீபத்தில் மிதக்க விடப்படும். முதல் முதலாக இந்தியாவில் கட்டப்பட்ட எச். எம். ஐ. எஸ். திருவாங்கூர் சில வாரங்களுக்கு முன்பு பரிட்சிக்கப்பட்டு, திருப்திகரமாக இருக்கிறது என்று தெரிந்தது. மத்தியக் கிழக்கிற்கு டக்காவில் ரயில்வே சாமான்களுக்காக வந்த ஒரு பெரிய ஆர்டர் பூர்த்தியாகி விட்டது. இந்த ஆர்டரில் நூற்றுக்கணக்கான வண்டிகள், தண்டவாளங்கள், வண்டி திருப்பும் இயந்திரங்கள் முதலிய பல ஆர்டர்கள் உள்ளன.

## வங்காளத்தில் யுத்த நிர்ப்பந்த நிலை

வங்கமாகாணம் பூராவும் யுத்த நிர்ப்பந்த நிலையில் இருப்பதாக சர்க்கார் பகிரங்கப்படுத்தியிருக்கின்றனர். சென்ற சில மாதங்களாக யுத்த சம்பந்தமாக வெளியிடப்பட்ட அவசர உத்தரவுகளெல்லாம் இப்போது அமுலுக்கு வருமாம்.

## ரேடியோ நிகழ்ச்சிகள்

ஜனவரி 2உ மாலை 7 முதல் 7-15 வரை 'கார் காலம்' என்ற தலைப்பில் திருச்சி ரேடியோவில் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் பேசுகிருர். அதைத் தொடர்ந்து கார் காலத்தைப் பற்றிய ஒரு இசைச் சித்திரம் நிகழும்.

மறு நாள் மாலை 5-40க்கு திரு. வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளை திருச்சி ரேடியோ மூலம் திருவெம்பாவையை விளக்குகிருர்.

5 முதல் 9 தேதி முடிய திருவையாற்றில் நடக்கும் தியாகராஜ உத்ஸவக் கச்சேரிகள் தினமும் பிற்பகலிலும் இரவிலும் திருச்சி, சென்னை ஆகிய இரு ஸ்டேஷன்களிலிருந்தும் ஒலிபரப்பப்படும்.



## காக்கிஞடாவில் மாதர் மகாநாடு

### ஸ்ரீமதி விஜயலட்சுமி தலைமை உரை

டிசம்பர் 29உ காகிஞடாவில் நடைபெற்ற அகில இந்திய மாதர் மகாநாட்டுக்கு ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் தலைமை வகித்தார். "நமக்கு விசேஷச் சலுகைகள்வேண்டியதில்லை. நமது தோழனுன ஆண்மகன் தனக்கு வேண்டுமென்று கோரும் உரிமைகளே நமக்கும் வேண்டுமென்று கோருகிருேம். சைன்யத்தில் பெண்களுக்கு இடமில்லையென்று சொல்லக்கூடாதென்பதே என் கருத்து" என்று வரவேற்புக் கமிட்டித் தலைவி பித்தாபுரம் யுவராணி தமது உரையில் குறிப்பிட்டார்.

ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் தமது தலைமை உரையில் அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

"பெண்களாகிய நமக்கு விசேஷப் பொறுப்புகள் உண்டு. இன்னெரு பெண் பெற்ற பிள்ளைகளைக் கொல்வதற்காகவா நாம் பிள்ளைகளைப் பெற வேண்டும்? உலகத்தில் ஒரு அமைப்பு ஏற்பட வேண்டுமென்று நாம் ஒன்று சேர்ந்து கேட்க வேண்டாமா? சுதந்திரம் அடைய இந்தியாவுக்கும் உரிமை உண்டென்பது அங்கிகரிக்கப்படாவிடில் மற்ற நாடுகளின் சுதந்திரத்துக்காக இந்தியா எப்படிப் போராட முடியும்?"

மகாநாட்டை யொட்டி ஏற்படுத்தப்பட்டிருந்த கைத்தொழில் கண்காட்சியை ஸ்ரீமதி கமலாதேவி திறந்து வைத்தார்.

## வெளியேறும் பிரயாணிகளுக்கு உதவ

கல்கத்தாவிலிருந்து பெருவாரியாக வெளியேறும் ஜனங்களுக்கு உதவ ஒரு தொண்டர் படை திரட்டலாமா? என்று ஒருவர் கேட்டதற்கு மகாத்மா காந்தி அனுமதியளித்திருக்கிருர். டில்லி ரயில்வே ஸ்டேஷனில் இப்போது ஒரு விடுதி ஏற்படுத்தப்பட்டு அது உதவியளித்துவருகிறது. பிரதிதினமும் சுமார் 2000 பேருக்கு மேல் கல்கத்தாவிலிருந்து அங்கு வந்துகொண்டிருக்கின்றனராம்.

## இந்தியத் துருப்புகளுக்குப் பிரிட்டிஷ் சர்க்கார் பாராட்டு

ஹாங்காங்கைப் பாதுகாப்பதில் இந்தியத் துருப்புகள் காட்டிய திரத்தைப் பாராட்டியும், அங்கு கொல்லப்பட்டவர்களின் உறவினர்களுக்கு அனுதாபம் தெரிவித்துக் கொண்டும் பிரிட்டிஷ் சர்க்கார் இந்திய சர்க்காருக்கு ஒரு செய்தி அனுப்பி யிருக்கின்றனர்.

## கைதிகளின் ரத்த உதவி

சென்னைச் சிறையிலுள்ள கைதிகளில் யார் யார் தாங்களாகத் தங்கள் ரத்தத்தை மற்றவர்களுக்கு உபயோகப்படுத்துவதற்காக எடுத்துக் கொடுக்கச் சம்மதித்திருக்கிருர்களோ அவர்களிடம் எழுத்துமூலம் சம்மதம் வாங்கிய பிறகே அவ்வாறு செய்ய வேண்டுமென்று சென்னை சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர். காயம்பட்ட பிரிட்டிஷ் ராணுவ வீரர்களுடைய உபயோகத்திற்காகக் கைதிகளின் இரத்தம் எடுக்கப்படுகிறது என்று சிறையை விட்டு வெளியேறிய ஒருவர் கூறியது காரணமாகவே சர்க்கார் இந்த அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர்.

இந்தத் திட்டத்தில் நிர்ப்பந்தம் ஏதுவும் இல்லை யென்றும், இந்திய ராணுவத்தின் நன்மைக்காகவே ஏற்பட்டதென்றும், அவ்வாறு ரத்தம் கொடுக்க முன்வருவோருக்குத் தண்டனைக் குறைவும் பிரதிபலனும் அளிக்கப்படுமென்றும் சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

## ஹிந்து மகாசபை மகாநாடு

### தலைவர்கள் கைது

அ. இ. ஹிந்து மகாசபை 23-வது மகாநாட்டை பகல்பூரில் நடத்தக்கூடாதென்ற பீஹார் சர்க்காரின் தடையுத்தரவை மீறி நடத்த முயன்றதற்காக பீஹார் மாகாண பொதுக் காரியதரிசியும், உபசரணைக் கமிட்டிக் காரியதரிசியும் கைது செய்யப்பட்டது ஏற்கெனவே பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. மகாநாட்டுக்குச் செல்லும் வழியில் டிசம்பர் 23-ந்தேதி இரவு 2மணிக்கு கயையில் ஹிந்து மகாசபைத் தலைவர் ஸ்ரீ வி. டி. சவர்க்கர் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டிருக்கிருர். டாக்டர் மூஞ்சே, டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு (பொதுக் காரியதரிசி), ஸ்ரீ. வி. தேஷ்பாண்டே, பாய் பரமானந்தர் ஆகிய ஹிந்து மகாசபையைச்சேர்ந்த பிரபலஸ்தர்கள் ஒருவர் பின் ஒருவராகக் கைது செய்யப்பட்டனர். தொண்டர்கள் உள்பட 1000 பேருக்கு மேல் கைது செய்யப்பட்டு உடனேயே பலர் விடுதலையாயினர். புதிய வங்க மந்திரியும் மகா சபையின் நிர்வாகத் தலைவருமான டாக்டர் சியாம பிரஸாத் முக்கர்ஜி கோல்காங்கிலுள்ள முசாபரி பங்களாவில் 25-ந் தேதி முதல் காவலில் வைக்கப்பட்டிருந்தார். 27-ந் தேதி பகல் பீஹார் சர்க்கார் தடையுத்தரவை வாபஸ் பெற்றதற் கிணங்க இவர் அங்கிருந்து 29-ந் தேதி திங்கட்கிழமை கல்கத்தா வந்தடைந்தார். மகாத்மா காந்தி, ராஜேந்திர பிரசாத், கனம் ஜெயகர், பண்டித மாளவ்யா ஆகியோர் பீஹார் சர்க்கார் விதித்த தடை உத்தரவைக் கண்டித்து அறிக்கைகள் வெளியிட்டிருக்கின்றனர். பகல்பூர் நிலைமைபற்றி தாம் ஏதுவும் செய்வதற் கில்லையென்றும், பிரச்னை பீஹார் மாகாணத்தையே பொறுத்தது என்றும் வைஸ்ராய் தெரிவித்து விட்டதாகத் தெரிகிறது. பகல்பூரில் ஹிந்துக்களும், முஸ்லீம்களும் ஒன்ருக பீஹார் சர்க்காரின் போக்கைக் கண்டிப்பதாக 24-ந் தேதி ஹர்த்தால் அனுஷ்டித்தனர்.

25-ந் தேதி வரைக் கைது செய்யப்படாத பிரதிநிதிகள் கூட்டம் ஒன்று பகல்பூரில் நடந்ததாகவும் மகாசபையின் விசேஷ மகாநாட்டை சீக்கிரத்தில் தர்ப்பாங்காவில் கூட்டுவதென்றும் தீர்மானிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

### மகாநாடு நடந்த விவரம்

டிசம்பர் 25, 26ந் தேதிகளில் பகல்பூர் தேவி பாபு தர்ம சாலையில் மகாசபைக் காரியக் கமிட்டி பொக்கிஷதார் லாலா நாராயண தத்தர் தலைமையில் 2 நாட்கள் மகாநாடு நடைபெற்றதாக அறிவிக்கப்படுகிறது. முதல் நாள் கூட்டத்திற்கு சுமார் 1000 பிரதிநிதிகளும் பல விஸிட்டர்களும் வந்திருந்தனர். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. 27-ந் தேதி மாலை 2-மணியோடு மகாசபைக் கூட்டம் முடிந்துவிட்டதாக அறிவிக்கப்பட்டது. இப்போது பகல்பூரில் அமைதி ஏற்பட்டிருக்கிறது.

## திருச்சியில் தமிழ்ப் புலவர் மாநாடு

### திரு. சோமசுந்தர பாரதியார் தலைமை

தமிழ்ப்புலவர் மாநாடு திருச்சி பப்ளிக் ஹாலில் டிசம்பர் 21உ திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை 8 மணிக்கு அண்ணுமலை பல்கலைக் கழகத் தமிழ்ப்பேராசிரியர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ. எம். எல். தமிழ்க்கொடியை ஏற்றுவித்து பண்டைக்காலத் தமிழரின் பெருமை நாகரிகம் முதலியவற்றை விளக்கித் தமிழை அபிவிருத்தி செய்ய எல்லோரும் பாடுபட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். ஸ்ரீ கே. ஏ. பி. விஸ்வநாதன் தலைவருக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார். திருச்சி திராவிட வாலிப கழகத்தாரும் வரவேற்பு அளித்தனர். வரவேற்புக் கமிட்டித் தலைவரான பண்டித கா. தேவநேயப் பாவாணர் ஸ்ரீ பாரதியார் தமிழுக்காகச் செய்துவரும் தொண்டைப்பற்றிப் பாராட்டிப் பேசினுர்.

தம் தலைமையுரையில் ஸ்ரீ பாரதியார் தமிழ் இயக்கத்தின் காரணத்தையும் அவசியத்தையும் பற்றிப் பேசினுர். இவ்வியக்கம் சிலரால் மறுக்கவும், வெறுக்கவும் படுகிறதென்றும், ஹிந்து மகாசபை சநாதனிகள் மகாநாடுகள் கூட்டுவது எவ்வளவு நியாயமோ, அதேபோலத் தமிழர்களும், தங்கள் பாஷையைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஒரு இயக்கம் நடத்துவது நியாயமென்றும் அவர் தெரிவித்தார். தமிழருடைய நோக்கம் மிகவும் விசாலமானதென்றும், அவர்களுடைய நாகரீகமும் சிறப்பும், பழம் தொல்காப்பியம், திருக்குறள் மூலமாக இனிது விளங்குகின்றது என்றும், சென்னை அரசாங்கத்தாரால் திறவப்பட்ட மொழிபெயர்ப்புக் கமிட்டி நன்கு அமைக்கப்பட வில்லை என்றும், அவர்கள் வெளியிட்ட புதிய சொற்கள் சரியான தமிழ் இல்லை என்றும் கூறினுர்.

பிற்பகல் 3 மணிக்கு மாநாடு மீண்டும் கூடிய போது, திருவாளர்கள் க. ப. சந்தோஷமும், பெருஞ்சொல் விளக்கனுர் சரவண முதலியாரும் விரிவுரை நிகழ்த்தினர். பின்னர் தமிழ் அபிவிருத்தி குறித்தும், தமிழ்ப்பாடப் புத்தகங்கள், திருச்சி வானொலி நிலயம், தமிழ் மாகாணப் பிரிவினை, சென்னை—அண்ணுமலைப் பல்கலைக் கழகங்களைத் தமிழ்ப் பல்கலைக் கழகங்களாக்குதல் முதலிய பல விஷயங்கள்பற்றியும் அரிய தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

சென்னை டெலிபோன் கம்பெனியில் ஓரியண்டல் டெலிபோன் கம்பெனிக்கிருந்த பங்குகள் அனைத்தையும் சர்க்கார் டெலிபோன் போர்டு விலைக்கு வாங்கி விட்டதாகத் தெரிகிறது. இந்தப் பங்குகள், ஷை டெலிபோன் கம்பெனியின் மொத்த பங்குகளில் 51 சதமானமாகும். கல்கத்தா, பம்பாய் டெலிபொன் கம்பெனிகளை இந்த போர்டு ஏற்கனவே வாங்கி விட்டது.



## நூல்களின் ஸ்டாக் எடுக்க சர்க்கார் ஏற்பாடு

### வியாபாரிகளுக்கு எச்சரிக்கை

400 பவுண்டுகளுக்கு மேல் நூல் வைத்துக்கொண் டிருப்பவர்கள் 10 தினங்களுக்குள் உள்ளூர் தாசில்தார் மூலம் ஜில்லாக் கலெக்டருக்கு ஸ்டாக் அனுப்ப வேண்டுமென்று சென்னை சர்க்கார் பாதுகாப்புச் சட்டப்படி உத்திரவிட்டிருக்கின்றனர். ஒவ்வொரு மாதத்திலும் 1, 15 தேதிகளில் ஸ்டாக் பற்றிய வாக்குமூலத்தை அவர்கள் கொடுக்கவேண்டும். தவறினுல் 3 வருஷ சிறைத் தண்டனையோ, அபராதமோ அல்லது இரண்டுமோ அளிக்கப்படும் என அந்த சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

## பீஹார் மாகாண மதுவிலக்கு வழக்கு

பீஹார் மாகாண மதுவிலக்கு வழக்கு விஷயமாகத் தலையிடும்படி சென்னை அட்வகேட்டு ஜெனரல் சார்பாக ஸ்ரீமான் கணபதிராய் என்பவர் சமஷ்டிக்கோர்ட்டில் ஒரு மனு தாக்கல் செய்திருக்கிருர். இந்த மதுவிலக்கு வழக்கு பிப்ரவரி ஆரம்பத்தில் விசாரணைக்கு வருமெனத் தெரிகிறது.

## ரங்கூனிலிருந்து திரும்பியவர்

சென்ற வாரத்தில் இரண்டு கப்பல்களில் சுமார் 3100 பேர் கல்கத்தா வந்து இறங்கினுர்கள். அவர்களில் பலர் வங்காளிகள்.

## அமெரிக்கத் தலைவர்கள் பூர்வோத்திர விவரம்

அமெரிக்கத் தலைவர்களின் பூர்வோத்திர விவரம் ரஸமானது. பிரெஸிடெண்ட் ரூஸ்வெல்ட் டச்சுக்காரர்; மிஸ்டர் வின்டெல் வில்கி ஜெர்மன் வழி வந்தவர்; ஆனுல் ஹிட்லருக்குப் பரம வைரி. நியுயார்க் மேயர் மிஸ்டர் லாகார்டியா ஒரு இதாலியர்.

## ஜப்பானியர் விஷமம்

கிறிஸ்துமஸ் தினத்தன்று ஜப்பானிய விமானங்கள் சிங்கப்பூரில் துண்டுப் பிரசுரங்களை எறிந்தன. அப்பிரசுரத்தில் வரையப்பட்டிருந்ததாவது:- "வெற்றி என்ற புனிதமான வெண் தியில் எல்லா வெள்ளைப் பேய்களையும் கொளுத்துங்கள்". துண்டுப் பிரசுரத்தின் ஒரு புறத்தில் பூர்வீககுகை வாசிகள் நெருப்புப் பந்தங்களை வீசிக் கொண்டிருப்பது போல் படம் வரையப்பட்டிருந்ததாம்!

## சென்னையில் ஸ்ரீ விநோபா

தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையின் வருஷாந்தப் பட்டமளிப்பு விழா காந்திஜியின் முதல் சத்தியாக்கிரகி ஆச்சார்ய விநோபாபாவேயின்தலைமையில் தியாகராயநகர் ஹிந்தி பிரசார சபைமண்டபத்தில் டிசம்பர் 28ந்தேதி மாலை நடைபெற்றது. ஹிந்தி பாஷையின் அவஸ்யம் பற்றியும், தேசிய ஒற்றுமை குறித்தும் எளிமையான ஹிந்தி நடையில் ஸ்ரீ விநோபாபிரசங்கித்தார். ஹிந்தி பாஷையை அலங்கரிக்க ஸ்ரீ துளஸிதாஸர் செய்த சேவையைப்பற்றியும் அவர் கூறினுர்.

கல்கத்தாவில் விமானப் படையெடுப்பினுல் ஏற்படும் விபத்துகளுக்குப் பிரதம சிகிச்சை யளிப்பதற்கான 49 விடுதிகள் நகரின் பல பாகங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

## திரு. எஸ். எஸ். பாரதியார் பிரசங்கம்

திருச்சி தமிழிசை மாநாட்டில் திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் நிகழ்த்திய பிரசங்கத்தின் சுருக்கம் அடுத்த வாரம் வெளிவரும்.

(ப-ர். குமரன்)

குமரன்

காரைக்குடி
விஷு-வரு மார்கழி-மீ 18உ

## அமைதிக்கு முன்பு

யுத்தம் அதிக தூரத்தில் நடக்கும் போது கஷ்டமேயில்லையென்று சொல்லலாம். இப்பொழுது நம்மைச் சூழ்ந்து கொண்டு விட்டது. இந்த நிலையில் கலக்கமடையாதிருக்க வேண்டியது அவசியமாகும். இதைப்பற்றியே சென்ற வாரமும் எழுதினோம். நகரத்தாருக்குத் தொழிலிடமாக இருப்பது தென் கிழக்குப் பகுதியேயாகும். அன்னும், சயாம், மலாயா, சுமத்ரா, பர்மா ஆகிய நாடுகளேயாம். இந்த நாடுகள் யாவும் யுத்தகளமாகி நிற்கின்றன. சைகானைத் தலைநகராகக் கொண்ட அன்னம் தேசம் ஜப்பானியர் ஆதிக்கத்திற் குட்பட்டது. அங்கு மட்டும் தொழில் செய்வோர் நிலை பெருங் கஷ்டத்துக்கும் கவலைக்கும் இடமாயிற்று. எனினும் அங்கே ஒரு சிரமமுமில்லையென்பதை யறிந்தோம். பணம் இங்கே அனுப்பமுடியவில்லையே தவிர, அங்குள்ள சொத்து சுதந்திரத்துக்கு எந்த ஆபத்தும் இல்லையென்றும், வியாபாரம் தொழில்கள் நன்றாகவே—லாபகரமாகவே நடைபெறுகின்றன வென்றும் தெரிய வந்தது. நிற்க.

அடுத்த சயாம்—தாய்லந்து பிரிட்டிஷாரை மோசம் செய்து ஜப்பானுடன் சேராமலிருந்தால் சண்டை இவ்வளவு நிலைமைக்கு வந்திராதென்று கருதலாம். எப்பொழுதும் மலாயாவின் பக்கத்து நாடாக இருந்து பிரிட்டிஷாரின் உறவிலேயே வளர்ந்து, ஆபத்து சமயத்தில் அது ஜப்பானுடன் சேர்ந்து கொண்டமை வருந்தத்தக்கது. அது மட்டும் ஜப்பானுடன் சேராமல் இருந்திருந்தால் யுத்தத்தின் ஆரம்பச் சண்டை தாய்லந்தில்தான் நடந்திருக்கும். அப்படித்தான் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் கடைசி சந்தர்ப்பத்தில் தாய்லந்து ஜப்பானுக்கு வழிவிடவே யுத்தத்தின் முதல் அடி கிட்டாவில் விழுந்தது. கிட்டாப்பகுதியிலுள்ள ஊர்களும் தோட்டங்களும் வெகுவாகச் சேதப்பட்டு விட்டன வென்றுதான் கருதவேண்டியிருக்கிறது. ஜப்பானியர் அழித்தபிறகு ஏதாவது மிஞ்சியிருந்தால் இப்பொழுது வருகிற செய்திகளின்படி பிரிட்டிஷார் திருப்பித் தாக்கி அதனையும் அழித்து வருகிறார்களென்று தெரிகிறது.

மலாய்நாடு பினாங்கிலிருந்து சிங்கப்பூர் வரை யுத்தகளமாகி யிருக்கிறது. பினாங்கிலிருந்து ஈப்போ வரை சுமார் 120 மைல்தூரம் ஜப்பானியர் வசமாகி யிருக்கிறதென்று தெரிகிறது. இன்னும் போர் நழுவிச் சிங்கப்பூர்ப் பக்கம் நகருமோ என்ற ஐயப்பாடும் எழுகின்றது. கடல் துறைமுகமான கோந்தான், கிள்ளான் ஆகிய இரு கரைப் பக்கமும் தாக்கப்பட்டிருப்பதாகச் செய்தி வந்திருக்கிறது. ஈயலோம்பங்களின் சேதம் நகரத்தார் கடைகளையும் இந்திய மக்களையும் அதிகமாக நேரடியாகப் பாதிக்கப் போகிறதில்லை. வீடுகளின் சேதமும் ரப்பர் தோட்டங்களின் சேதமுந்தான் பாதிக்கக்கூடும். உலகமே தலைகீழாகிற போது எல்லாரும் சிறிது கஷ்டத்தை அனுபவிக்காமல் முடியாதென்பது உறுதி. ரங்கூனிலும், சுமத்ராவிலும் சில குண்டுகள் வீசப்பட்டன வென்று அறிவிக்கப்படுகிறது.

நடவடிக்கைகளைப் பார்க்கும் போது ஜப்பானியரின் அட்டகாசம் பெரிதாகவேஇருக்கிறது. ஹாங்காங், பிலிப்பைன்,மலாயா ஆகியஇடங்களில் நடைபெற்று வரும் போரின் போக்கைப் பார்க்கும் போது, பிரிட்டிஷாரின் வெற்றி சிறிது நாள் தள்ளிப்போகிறதென்று தெரிகிறது. மிஸ்டர் சர்ச்சில் பேசுவதிலிருந்து 43-ம் வருஷத்திற்கிடையில் ஜப்பான் அடங்காதென்று கூடக் கருதவேண்டி யிருக்கிறது. இந்தியாவிலும் அரசாங்கத்தார் சர்வ ஜாக்ரதையாக யுத்தத்தை எதிர்பார்த்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட நிலைமையில் நாம் சர்வ ஜாக்ரதையாக இருக்க வேண்டிய தவசியமாகும்.

தொழில் நடைபெறுமிடங்களில் ஏற்பட்டுள்ள தட்டுக்கெட்ட நிலைமையால் எல்லாரும் ஏழைகளாகப் போய் விட்டதாக நினைக்க வேண்டியதில்லை. நகைகள் இருக்கின்றன. ஏராளமான சாமான்கள் உள்ளன. பல பணக்காரரிடத்தில் நோட்டுகள், தங்கம், வெள்ளியிருக்கின்றன. ஆனால் உடம்பில் பலமில்லை; ஆயுதம் வைத்துக் கொள்ள முடியாது. இந்த நிலையில் நம்முடைய சொத்துக்கள் நம் வசமிருந்துவருவதற்கு என்ன பாதுகாப்பு இதுவரை இருந்ததென்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். நம்மைச் சுற்றிலு முள்ளவர்களான உடல் பலமுள்ள ஜனங்கள் நம்மைத் தொல்லை செய்யவில்லை. அதற்குக் காரணம் இரண்டு— ஒன்று சட்டத்திற்குப் பயந்திருப்பது. மற்றொன்று அவர்கட்கு உணவுக்கு வழியும் தொழிலும் இருந்தமை. சண்டைக் காலத்தில் இந்த இரண்டும் தளர்ச்சியுறுமா, அப்படியே இருக்குமா என்பது கவனிக்க வேண்டிய விஷயமாகும். ஒரு குண்டு விழப்போகிறதென்று ஒருவன் சொன்னால், 100 பேர் கலகம் செய்ய முற்படக்கூடுமென்று தோன்றுகிறது. தவிர தங்கம் இரும்பு செம்பு பித்தளைகளின் விலை ஏறவே தொழிலாளிகள் பல்லாயிரம் பேருக்கு வேலை போய்விட்டது. நூல்விலை ஏறி ஏற்றுமதி குறையவே நெசவுத் தொழிலாளிகள் திண்டாடுகின்றனர். பணக்கஷ்ட மேற்பட்டால் சாமான் விலையேற்றத்தில் கட்டிட வேலைகள் நின்றுபோகும். கொத்தன் தச்சன் முதலியோர் திண்டாடுவர். இப்படியே படிப்படியாகத் தொழில் தொலைந்து போகும். தொழிலாளிகள் லட்சக்கணக்கில் பட்டினி கிடக்கும் போது சிலருடைய வீட்டுக்குள்ளிருக்கும் நகையும் நோட்டும் பந்தோபஸ்தாக இருக்குமென்று திடமாக நம்பிவிடக் கூடாது. இப்பொழுதே தகுந்த முன்னேற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

சிலர் இந்த சமயத்தில் சாமர்த்தியமாகப் பக்காப்படுத்த நினைத்து ரூபாய், சில்லறை, வெள்ளிக்கட்டி, பெரிய நோட்டு, சிறிய நோட்டு என்று மாற்றி மாற்றிப் பிடித்துக் கட்டிவைக்கின்றனர். வெள்ளி ரூபாயைப் பிடித்து இறுக்கிக் கட்டி வைத்தவர்களெல்லாம் அரசாங்கத்தார் வெளியிட்ட ஒரு சிறு அறிக்கையைக் கண்டு தெருவில் கொண்டு வந்து கொட்ட வேண்டியதாயிற்று. நூறு ரூபாய் நோட்டுக்கு ரூபாய் வேண்டுமானால் ஒரு ரூபா வட்டம் கொடுக்க வேண்டிய நிலைமை மாறி, நூறு ரூபாய்க்கு ஒரு நோட்டு வேண்டுமானால் ஒரு ரூபாயும் அதற்கதிகமாகவும் வட்டம் கொடுத்துக் கும்பிட்டு விழும்படியாய் விட்டது. அப்படியே அரைக்கால் ரூபா வெள்ளிப் பணத்தைப் பிடித்து இறுக்கியவர்கள் ஒரு சிறு உத்தரவைக் கண்டு பையை அவிழ்த்துச் சொரிந்து விட்டனர். இப்பொழுது நோட்டு வேட்டை நடக்கிறது. நூறு ரூபாய் நோட்டைப் பற்றி ஒரு வதந்தியைக் கிளப்பி விடுகின்றனர். இதை நம்பி 10, 5, 1 ரூபா நோட்டுகள் இரும்புப் பெட்டி வாசத்துக்கு யோக்கியமாகி யிருக்கின்றன. சில்லறை நோட்டுகள் உலவுவதிலிருந்து மறைந்து விட்டன. இப்படி ரூபாயும் சில்லறையும் சில்லறை நோட்டுகளும் கட்டப்படுமானால் யுத்த பீதிக்கிடையில் வாழ்க்கை நிகழ்ச்சி எவ்வளவு துன்பப்படுமென்பதை உணர வேண்டும். இம்மாதிரி அசட்டுத்தனங்கள் தோன்றுவதற்குக் காரணம் உலக அரசியலை அறியாமையும், நாடு எப்படி ஆளப்படுகிறதென்பதை உணராமையுந்தானென்று கூற வேண்டும். அரசாங்கத்திற்கு ஆபத்து வரும் போது நோட்டுக் காகிதங்களையும் சில வெள்ளிக் கட்டிகளையும் நம்பி நிற்க முடியாது. ஆபத்துக்குக் கொஞ்சம் பத்திரப்படுத்த வேண்டியது மிக மிக அவசியந்தான். சந்தேகமில்லை. அதற்கு விஷயம் விளங்காமல் நோட்டு மாற்றிக்கொண்டிருப்பது மூடத்தனமென்பதிலும் சந்தேகமில்லை. கவர்ன்மெண்டு அறிக்கைகளைக் கண்டு பிறகு வேண்டியதைச் செய்யலாமல்லவா? ஆபத்து வருவது வாஸ்தவமானால் அதே ஆபத்து மற்ற நோட்டுகளுக்கு வர நேரமாகாதென்பது உறுதி. யுத்த சமயத்தில் இப்படிப்பட்ட தொல்லைகளைக் குறைக்க எல்லாரும் முற்பட வேண்டும். யுத்தம் முடிந்து அமைதியேற்படும் வரை பத்தியம் காப்பது போல் சில கட்டுப்பாடுகளைக் கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவைகளில் நாணயச் செலாவணி விஷயமும் ஒன்று.

---

### பில் கலக்டர் கோவிந்தசாமிக்குத் தண்டனை

காரைக்குடி முனிசிபாலிடியில் பில் கலெக்டர் வேலை பார்த்து வரும்போது, முன்னூற்றுச்சொச்சம் ரூபாயைக் கையாடித் தலைமறைவாகத் திரிந்து வந்ததாகத் திருக்காட்டுப்பள்ளியில் கைது செய்யப்பட்ட கோவிந்தசாமி நாயுடுவுக்கு தேவகோட்டை மாஜிஸ்திரேட் ஒரு வருடக் கடுங்காவலும் 350 ரூ அபராதமும் தவறினால் மேற்கொண்டு 3 மாதக் கடுங்காவலும் விதித்திருப்பதாகத் தெரிகிறது.

---

### நெசவுத் தொழிலாளருக்குக் கஞ்சி

அருப்புக் கோட்டையில் கைத்தறி நெசவுத் தொழிலாளிகள் 20,000 பேர் இருக்கின்றனராம். நூல்விலை உயர்வினால் 8,000 கைத்தறிகள் வேலையின்றிக் கிடக்கின்றன. வேலையில்லாது தவிக்கும் தொழிலாளர்க்குக் கஞ்சி வைத்துக் கொடுக்க அருப்புக் கோட்டைப் பஞ்சாயத்து போர்டார் ரூ 1000 நன்கொடை யளித்திருக்கின்றனராம்.

---

### கீழ்க்கோடிக்கு புது சேனாதிபதி

கீழ்க்கோடியில் பிரிட்டிஷ் சேனாதிபதியாக ஸர் புரூக் பாபமுக்குப் பதிலாக இன்றைய போர் முறையில் நல்ல அனுபவமுள்ள ஜெனரல் பௌனல்ஸ் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

---

### ஸ்ரீ ஆனே வீட்டில் திருட்டு

வைஸ்ராய் நிர்வாக சபை அங்கத்தினரான ஸ்ரீ எம். எஸ். ஆனே வீட்டில் முந்தின வாரம் நாலைந்து திருடர்கள் புகுந்து அங்கிருந்த சில சாமான்களைக் களவாட முயன்றனர். ஆனால் சௌக்கிதார்கள் அவர்களைப் பிடித்துவிட்டனர். திருட்டு நடந்த சமயத்தில் சனம் ஆனே ஊரில் இல்லை. இதுவரையில் வைஸ்ராய் நிர்வாக சபை அங்கத்தினர் வீட்டில் திருட்டு முயற்சி நடந்ததில்லை. போலீசார் விசாரித்துவருகின்றனர்.

---

### மலாயாவுக்குச் சீனத் துருப்புகள்

நன்றாகப் பழக்கப்பட்ட சீனத் துருப்புகளை மலேயாவில் போர் செய்ய அனுப்ப மார்ஷல் சியாங்கே ஷேக் தயாராக இருக்கிறாராம். 2½ லட்சம் துருப்புகளை அனுப்ப முடியுமென்று 1939ல் சீன சர்க்கார் பிரிட்டிஷ் சர்க்காரிடம் தெரிவித்தது. இப்போது பர்மா ரஸ்தா வழியாகவே சீனாவுக்கு சப்ளைகள் செல்வதால் அதைக் காக்க வேண்டியது அவசியமாகிறது.

---

கல்கத்தா நகரில் விரோதிகளின் வெடிகுண்டுகளால் தாக்கப்பட்டு வீழ்பவர்க்கு உதவ கல்கத்தா கார்பொரேஷன் முதலில் ரூ 2,35,200 யும் பிறகு மாதா மாதம் ரூ 27,900ம் செலவு செய்ய ஒரு திட்டம் போட்டிருக்கிறது.

## சென்னையில் விதவா விவாக மகாநாடு

### நிறைவேறிய தீர்மானங்கள்

சென்னை ஜார்ஜ் டவுனிலுள்ள ஆரிய சமாஜ மண்டபத்தில் டிசம்பர் 29உ விதவா விவாக மகாநாடு நடைபெற்றது. ஸ்ரீமதி ஏ. ருக்மணி லட்சுமிபதி எம். எல். ஏ. தலைமை வகித்தார். விதவா விவாக இயக்கத்தில் ஆரிய சமாஜம் செய்து வரும் அருந் தொண்டினையும், மறுமணத்தை அனுமதிக்கும் சட்டத்தை நன்கு பிரசாரம் செய்ய வேண்டியதன் அவசியத்தையும், கட்டாய மணப்பதிவு முறையை அமுலுக்குக் கொண்டுவர வேண்டியதன் அவசியத்தையும் தலைவர் தமது உரையில் விளக்கினார்.

மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள் வருமாறு:—

சமூகத்தில் கட்டாய வைதவ்ய முறை இல்லாதிருப்பதற்காக, விதவா விவாகத்தை ஆதரிக்கும்படியும், மறுமணம் செய்ய விரும்பும் விதவைகள் விவாகம் செய்து கொள்ள உதவி செய்து ஊக்குவிக்கும்படிக்கும் இந்து சமூகத்தின் பல பிரிவுகளையும் கேட்டுக்கொள்கிறது.

மனைவியை இழந்து மறுமணம் செய்ய ஆசை கொள்ளும் ஆடவர்கள் தங்கள் வயதுக்குத் தக்க விதவைகளையே மணம் செய்யும்படி கேட்டுக்கொள்கிறது.

தென் இந்தியாவிலுள்ள பிரதேசங்களில் கிளைகள் ஏற்படுத்தும்படியும், தென் இந்திய பாஷைகளில் தேவையான பிரசுரங்களை வெளியிடுமாறும் லாகூர் ஸர் கங்காராம் தர்ம ஸ்தாபனச் சங்கத்தைக் கேட்டுக்கொள்கிறது. சென்னை விதவா ஆசிரமத்தின் தேவையை உணர்ந்து, லாகூர் கங்காராம் தர்ம ஸ்தாபனச் சங்கத்தையும், இம்மாகாணத்திலுள்ள தர்மவான்களையும் தாராளமாக நன்கொடையளிக்குமாறு வேண்டுகிறது.

தென் இந்தியாவில் விதவா விவாகத்தில் அக்கறை கொண்டுள்ள தனி மனிதர்களும், ஸ்தாபனங்களும் சென்னை விதவா விவாக சகாய சபையுடன் ஒத்துழைக்கும்படி கேட்டுக்கொள்கிறது.

---

### காரைக்குடியில் பொதுக்கூட்டம்

சென்ற சனிக்கிழமை மாலை 5 மணிக்கு காரைக்குடி யஸ். யம். யஸ். ஹைஸ்கூல் ஹாலில் ஜில்லா யுத்தப் பிரசாரக் கமிட்டியின் ஆதரவில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. தேவகோட்டை ரிவனியூ டிவிஷனல் ஆபீசர், சிவகெங்கை போலீஸ் டிப்டி சூப்பிரண்டண்ட், காரைக்குடி சர்க்கிள் இன்ஸ்பெக்டர், திருப்பத்தூர் தாலூக்கா மாஜிஸ்திரேட், காரைக்குடி முனிசிபல் கமிஷனர் முதலிய அதிகாரிகளும், நகரப் பிரமுகர்களும், பொது ஜனங்களும் விஜயஞ் செய்திருந்தனர். கூட்டத்திற்கு திரு. மெ. செ. ச. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமைவகித்தார். தலைவரும், கமிஷனர் ஸ்ரீ திரு. அ. கோபாலகிருஷ்ணன் அவர்கள், தேவகோட்டை வக்கீல் திரு. யம். ஆர். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள், திரு. அ. பொன்னம்பலனார் அவர்கள், டாக்டர் வர்கீஸ் அவர்கள், தேவகோட்டை சப்கலக்டர் திரு. பி. மாதவராவ் நாயுடு அவர்கள் முதலிய பலரும் யுத்தத்தின் நிலைமைபற்றியும், எல்லோரும் யுத்த நிதிக்கு உதவவேண்டியதன் அவசியம் பற்றியும் பேசினர். தேவகோட்டை சப்கலக்டர் பேசும் போது, சமீபத்தில் தேவகோட்டை, காரைக்குடி முதலிய இடங்களில் விலைவாசிகள் உயர்வு காரணமாகப் பொது ஜனங்களிடையே பரபரப்பும் கலவரமும் தோன்றும் படியான நிலைமை ஏற்பட்டது குறித்தும், தாம் வியாபாரிகளைக் கண்டு விலை நிர்ணயக் கமிட்டியார் நிர்ணயிக்கும் விலைக்கே முக்கிய பொருள்களை விற்கும்படி கோரியிருப்பதாயும், கடைகளில் விலை ஜாப்தாக்களைத் தொங்க விடும்படி கேட்டிருப்பதாயும், பொது ஜனங்களும் இவ்விஷயத்தில் ஒத்துழைத்து அமைதி நிலவும்படி செய்வது இந்த நெருக்கடியான சமயத்தில் மிக அவசிய மென்றும் குறிப்பிட்டார். தலைவர் முடிவுரையுடன் கூட்டம் முடிவுற்றது.

---

போர்னியோத் தீவின் வடபாகத்திலுள்ள சாவாக் ராஜ்யத்தின் தலைநகரான குசிங் ஜப்பானியர் வசமாகிவிட்டது.



## மலாயா யுத்த நிலைமை

### இப்போவிலிருந்து வாபஸ்

டிசம்பர்23-உ ரங்கூனில் முதன்முதலாக ஏற்பட்ட விமானப்படை எடுப்பில் பொது மக்களில் 600 பேருக்குச் சேதம் ஏற்பட்டது; சில கட்டிடங்களுக்கும் சேதம். இரண்டு தினங்கள் கழித்து நடந்த இரண்டாவது விமானப் படை எடுப்பில் உயிர்ச் சேதம் மிகக் குறைவு; ராணுவத்தினரிடையேயும் சேதம் சொற்பந்தான். முதல் தடவை அவ்வளவு அதிகமாகச் சேதம் ஏற்பட்டதற்கு ஜனங்கள் சட்டென கட்டிடத்திற்குள் சென்று மறைந்து கொள்ளாமல் தெருவிலே ஓடிவந்ததுதான் என்று சொல்லப்படுகிறது. முதலாவது படையெடுப்பில் சுமார் 60 ஜப்பானிய விமானங்கள் கலந்துகொண்டனவாம்.

டிசம்பர் 24-ந் தேதி மலேயாவிலிருந்து வந்த தகவலிலிருந்து வடமேற்கு மலேயாவிலும், ஈப்போவுக் கருகிலும் கடுமையான போர் நடப்பதாகத் தெரிகிறது. ஈப்போவும், கோலாலம்பூரும் ஜப்பானிய விமானங்களால் தாக்கப்படுகின்றன. ஈப்போவிலிருந்து ஸ்திரீகளும் குழந்தைகளும் அப்புறப்படுத்தப்பட்டு விட்டனர். பெரும்பான்மையான வியாபார ஸ்தலங்கள் மூடப்பட்டு விட்டன.

டிசம்பர் 28-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை ஈப்போ நகரிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் வாபஸ் ஆயின; ஜப்பானியப் படைகள் வடக்கே யிருந்தும் தென்மேற்கிலிருந்தும் இடுக்கிபோல் வந்து நகரைச்சூழ்ந்து மும்முரமாகப் போரிட்டதன் விளைவாகவே பிரிட்டிஷ் படைகள் வாபஸ் பெற நேர்ந்தது. சென்ற 4 தினங்களில் ஈப்போ 18 முறை ஜப்பானிய விமானங்களால் தாக்கப்பட்டது.

சென்ற வெள்ளிக்கிழமை யன்று கோலாலம்பூர் மீது ஜப்பானிய விமானங்கள் தாக்கியதன் விளைவாக சர்க்கார் ஆபீசுகளுக்குச் சேதம் ஏற்பட்டது. சில சிப்பந்திகளுக்குக் காயம். கோயில் சொத்துக்களுக்கு மிகுந்த சேதம். ஒரு மசூதி தாக்குண்டபோது தொழுது கொண்டிருந்த 3 பேர் இறந்தனர்.

ஈப்போவுக்கு வடக்கிலும் தென்மேற்கிலுமிருந்து அபாயம் வந்ததால், பிரிட்டிஷ் படைகள் ஈப்போவிலிருந்து வாபஸாகி நகருக்குத் தெற்கே புதிய அணியை அமைத்திருக்கின்றன. வெளியேற்ற முடியாத வெள்ளீயம் அழிக்கப்பட்டு விட்டது. இது மலேயாவின் நான்காவது நகரம். மற்றவை சிங்கப்பூர், பினாங்கு, கோலாலம்பூராகும். ஈப்போவின் ஜனத்தொகை 40,000. வெள்ளீயத் தொழிலுக்குப் பிரதான ஸ்தலம். சாதாரண விமான நிலையமும் உண்டு.

மலேயாவின் மற்ற முனைகளில் மாறுதல் இல்லையாம்.

கிள்ளான் விமான நிலையத்தின் மீது 29உ குண்டு வீசப்பட்டது. சுங்கேபட்டாணியிலுள்ள (ஜப்பான் வசமான) விமான நிலையத்தை ஆர். ஏ. எப். விமானங்கள் கடுமையாகத் தாக்கி 10 எதிரி விமானங்களை அழித்தனவாம்.

வட மலாயாவில் இராப்பகலாகக் கடுமையான போராட்டம் நடக்கிறது. நேச தேசத் துருப்புகளிடையே குழப்பத்தை உண்டுபண்ண ஜப்பானியர் சகலவித தந்திரங்களையும் உபயோகித்து வருகின்றனராம். இந்தியத் துருப்புகளைவிட எதிரி துருப்புகள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தும் எதிரிகட்கு அதிகச் சேதம். சில ஜப்பானியர் போலித் துப்பாக்கிகளைத் தாங்கி வருகின்றனராம். மற்றவர்கள் மலாய்க்காரர் போல வேஷமணிந்து வருகின்றனராம். சில ஜப்பானியர் ரப்பர் மரங்கள் மீதேறி கைக் குண்டுகளை வீசுகின்றனராம்.

மலேயாவின் ஹைகமிஷனராக 'ஸ்ட்ரெய்ட்ஸ் எக்கோ' என்னும் ஆங்கில தினசரியின் ஆசிரியர் சரவணமுத்து என்பவரை (இலங்கையைச் சேர்ந்த பிரிட்டிஷ் பிரஜை) ஜப்பானியர் நியமித்திருக்கின்றனராம். இன்னும் பல ஆசியாக்காரர்கள் நியமிக்கப்பட்டிருப்பதாக ஜப்பான் வசமான பினாங்கு ரேடியோ தெரிவிக்கிறதாம்.

## வாஷிங்டனில் மிஸ்டர் சர்ச்சில்

### அச்சு நாடுகளை எதிர்க்க ஒருமித்த திட்டம்.

பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில் அச்சு நாடுகளைத் தோற்கடிப்பதற்கான ஒருமித்த யுத்த முயற்சிக்கான சகல பிரச்னைகளையும் ஜனாதிபதி ரூஸ்வெல்டுடன் கலந்தாலோசிக்க வாஷிங்டன் வந்திருப்பதாக டிசம்பர் 22-ந் தேதி அறிவிக்கப்பட்டது. டிசம்பர் 26-ந் தேதி யு. எஸ். காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு ஸெனெட் மண்டபத்தில் ஜப்பானிய யுத்த விளைவைப்பற்றி மிஸ்டர் சர்ச்சில் ஒரு பிரசங்கம் செய்தார். 1942ம் வருஷத்தில் நேச நாடுகளுக்குக் கடுமையான சங்கடங்கள் இருக்கும் என்றும், 1943-ல் முன்னேறித் தாக்கப் போவதாகவும் அவர் அறிவித்தார்.

### கானடா பிரயாணம்

மிஸ்டர் சர்ச்சில்,கானடா பிரதம மந்திரி மிஸ்டர் மெக்கன்ஸி கிங் இருவரும் ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டின் விசேஷ ரயில்வண்டியில் டிசம்பர் 29-உ ஒட்டாவா வந்தனர். கானடாப் பிரிவி கவுன்சில் மெம்பர் ஸ்தானம் மிஸ்டர் சர்ச்சிலுக்கு விசேஷ கவுரவமாக வழங்கப்பட்டிருக்கிறது. அவர் பார்லிமெண்டில் பேசிய பின் மீண்டும் வாஷிங்டன் திரும்புவார். பொதுவாக யுத்த முறைபற்றி பிரிட்டனுக்கும் யுனைடெட் ஸ்டேட்ஸுக்கும் ஒரு பூர்வாங்க ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டதாகத் தெரிகிறது.

### மாஸ்கோ சம்பாஷணை

பிரிட்டிஷ் வெளிநாட்டிலாக மந்திரி மிஸ்டர் அந்தோனி ஈடன் ஸோவியத் குடியரசுத் தலைவர் மிஸ்டர் ஸ்டாலின் ஆகிய இருவரும் கலந்து பேசியதாக 28-ந் தேதி வந்த மாஸ்கோ செய்தி கூறுகிறது. சம்பாஷணையின் போது மிஸ்டர் மாலடவ், ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் இன்னும் சில ராணுவ அதிகாரிகளும் கூட இருந்தனர். மிஸ்டர் ஈடன் 29-ந் தேதி லண்டன் திரும்பினார். இந்த சந்திப்பு மிகவும் பலன்தரத் தக்கதென்று அவர் தெரிவித்திருக்கிறார்.

இதனிடையில் ரஷ்ய—ஜப்பானிய உறவு சிநேகபாவமாகவே யிருப்பதாக ஒரு ஜப்பானிய அதிகாரி தெரிவித்திருக்கிறார்.

### சீனாவில் ஜெனரல் வேவல்

இந்திய சேனாதிபதி ஜெனரல் வேவலும் சீனப்படைத் தலைவர் ஜெனரல் சியாங்-கை-ஷேக்கும் டிசம்பர் 22-ந்தேதி முதல் மூன்று தினங்கள் கலந்து பேசினர். சம்பாஷணையின் போது அமெரிக்க விமானப்படைத் தலைவரும் இருந்தார். போர்த் திட்டத்தைப் பற்றி ஒருமுகமான அபிப்பிராயம் ஏற்பட்டிருப்பதாயும், சங்கிங்கில் ஒரு ராணுவ சபை ஏற்படுத்தப்பட்டிருப்பதாகவும் அறிவிக்கப்பட்டது.

---

### ஹாங்காங் சரண் அடைந்தது

டிசம்பர் 25-உ ஹாங்காங் தீவு ஜப்பானியரிடம் சரணடைந்துவிட்டதாக லண்டனிலிருந்து பிரிட்டிஷ் காலனி மந்திரி காரியாலயம் அறிவித்தது. டிசம்பர் 18உயிலிருந்து 7 நாட்கள் ஹாங்காங் தீவு ஜப்பானியரால் கடுமையாகத் தாக்கப்பட்டது. போதிய ஜல சப்ளையும் விமானப் படையின்மையுமே சரண் புகுந்ததற்குக் காரணமாகச் சொல்லப்படுகிறது.

பிலிப்பைன் தீவுகளில் லூஸான் தீவில் ஜப்பானியர் ஏராளமாக இறங்கினர். மற்ற தீவுகளைச் சுற்றியும் 100 துருப்பேற்றிக் கப்பல்களிலிருந்து துருப்புகள் இறக்கப்பட்டன. டிசம்பர் 24உ மணிலா நகரின் வாயிலில் கடுமையான யுத்தமும் விமானப் படையெடுப்பும் நிகழ்ந்தன. டிசம்பர் 26-உ மணிலா தற்காப்பு வசதியற்ற நகரம் என்று அமெரிக்க அதிகாரி அறிவித்தார்; என்றாலும் 27-உ 5 தடவை படையெடுப்பு எச்சரிக்கை செய்யப்பட்டது. சுமார் 100 குண்டுகள் கடற்கரை யோரமாக வீசப்பட்டன; டிசம்பர் 26உ மணிலாவிலிருந்து ராணுவம் வாபஸ் ஆயிற்று; ஜனங்களைப் பாதுகாப்பதற்காகப் போலீஸ் படையும் கொஞ்சம் துருப்புகளும் வைக்கப்பட்டிருக்கின்றன.

சீனாவில் கடும் போர் நடப்பதாக சங்கிங் அறிக்கை கூறுகிறது.

ஹாங்காங் பூராவும் ஜப்பானியர் வசமாகி விட்டதாக ஜப்பானிய அறிக்கை தெரிவித்திருக்கிறது.

## காரியக் கமிட்டியின் தீர்மானங்கள்

### காங்கிரஸ் தலைமையிலிருந்து விலக மகாத்மாவுக்கு அனுமதி

பர்தோலியில் டிசம்பர் 23ந் தேதி முதல் நடைபெற்று வந்த காங்கிரஸ் காரியக் கமிட்டி 30உ ஐந்து தீர்மானங்களை நிறைவேற்றி யிருக்கிறது. ராஜீய நிலைமை பற்றி அது நிறைவேற்றியுள்ள தீர்மானத்தின் சாரமாவது:—

ஆக்கிரமிக்கப்பட்டுள்ள நாடுகளிடத்தில் காங்கிரஸின் அனுதாபம் இருக்கிறது. ஆனால் சுதந்திரம் பெற்ற, சுயேச்சையான இந்தியா ஒன்றே தேசப் பாதுகாப்புக்கான காரியத்தைச் செய்ய முடியும். பிரிட்டிஷ் சர்க்காரிடம் அவநம்பிக்கையும் விரோதமும் கொள்வதாகிய நிலைமை நாட்டில் உள்ளது. இதைப் போக்குவதற்கு பெரிய வாக்குறுதிகள் அளித்தாலும் போதாது. எனவே ஏகாதிபத்ய சர்க்காருடன் வலிய வந்து உதவ முடியாமலிருக்கிறது. 1940 செப்டம்பரில் அ. இ. கா. கமிட்டி பம்பாயில் நிறைவேற்றிய தீர்மானம் இன்னும் அப்படியே இருப்பதுடன் அதுவே இன்னும் காங்கிரஸ் கொள்கையாகவும் இருக்கிறது.

காந்திஜி காங்கிரஸில் வகித்து வந்த தலைமைப் பதவியிலிருந்து விலக அவருக்கு அனுமதியளித்துக் காரியக் கமிட்டி மற்றோர் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறது.

### காந்திஜி நிலைமை

காரியக் கமிட்டியின் மெம்பர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டறிந்தபின் மகாத்மா காந்தி தன்னோடு காரியக்கமிட்டி அஹிம்ஸை விஷயத்தில் ஒத்துப்போக முடியாததால் தாம் பொறுப்பிலிருந்து விலக அனுமதிக்கும்படி ஒரு கடிதத்தின் மூலம் கேட்டிருந்தார். ஷை கடிதத்தை காரியக்கமிட்டி ஆலோசித்து மேற்சொன்ன பொறுப்பிலிருந்து விலக அவருக்கு இடமளித்திருக்கிறது.

காங்கிரஸ்காரர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறை பற்றி இரண்டு தீர்மானங்கள் யோசனை கூறுகின்றன. காங்கிரசின் மூலாதாரக் கொள்கை அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டது என்பது வலியுறுத்தப்பட்டிருக்கிறது. மலாயா, ரஷ்யா, சீனா தேசங்களில் யுத்தத்தினால் கஷ்டப்படுவோருக்கு அனுதாபம் தெரிவிக்கிறது மற்றொரு தீர்மானம்.

---

### அ. இ. கா. கமிட்டிக்கூட்டம் வார்தாவில் நடைபெறும்

ஜனவரி 15-ந்தேதி வார்தாவில் கூடப் போகும் அ. இ. கா. கமிட்டிக்கூட்டத்தில் பல முக்கிய பிரச்னைகள் விவாதிக்கப்படவேண்டியிருப்பதால் மெம்பர்கள் எல்லோரும் அவசியம் வரவேண்டுமென்று கோரப்பட்டிருக்கிறது.

மொத்தம் மெம்பர்களின் தொகை 360. அதில் பலர் தற்போது காவற்கைதிகளாகச் சிறைகளில் இருக்கின்றனராம். விசிட்டர்களுக்கும் போதிய வசதி செய்து கொடுக்கப்படும்.

---

பிரிட்டிஷ் துருப்புகள் லிபியாப் பகுதியில் பெங்காஸியைப் பிடித்து விட்டதாக 25-ந் தேதி அறிவிக்கப்பட்டது. நகரம் பிடிபட்டபோது அதிக சேதத்துக்குள்ளாகி யிருந்தது.

ரஷ்யாவில் ஸோவியத் துருப்புகள் பல ஊர்களைத் திரும்பப் பிடித்திருக்கின்றன. மாஸ்கோவும், டூலாப் பிரதேசமும் இப்போது அபாயத்திலிருந்து விடுவிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

பிரிட்டிஷ், ராணுவம், கடல், விமானப் படைகள் ஒன்று சேர்ந்த ஒரு கோஷ்டி சென்ற சனிக்கிழமை நார்வே கடற்கரை மீது படை எடுத்தன. இரண்டு தீவுகளில் பிரிட்டிஷ் படைகள் இறங்கின. 125 ஜெர்மானியர் கொல்லப்பட்டனர்; 95 பேர் கைதியாயினர். மொத்தம் 15,650 டன் எடையுள்ள 8 எதிரிக் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன.

அமெரிக்க யுத்தக் கப்பல்கள் உதவிக்கு வந்தாலொழிய மணிலாவைப் பற்றிய நம்பிக்கையை இழந்துவிட வேண்டியதுதான் என்று ஒரு லண்டன் நிருபர் தெரிவித்திருக்கிறார். ஆனால், அதே சமயத்தில், பிலிப்பையின் தீவுகளிலிருந்து ஜப்பானியரை விரட்டியடிக்கக் கூடிய அளவுக்கு கடற்படை பலம் வருவதாக அமெரிக்க ஹைக் கமிஷனர் தெரிவித்திருக்கிறார்.

## மார்க்கெட் செய்தி

### சிங்கப்பூர் ரப்பர்

டிச. 27உ

புகை போட்டது ஸ்டாண்டர்டு ஒரு பிக்கல் ஐம்பது வெள்ளி அறுபத்தேழு காசு.

---

### கொழும்பு மார்க்கெட்

கொழும்பு, டிச. 30உ

| | | |
|---|---|---|
| கிரேப் ரப்பர் | 57 | சதம் |
| ஷீட் ” | 56 | ” |

### கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் | ரூ. 41·00 |

---

### சென்னை மார்க்கெட்

சென்னை, டிச. 30உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 32 | 2 | 0 |
| சவரன் (சில்லறையில்) | 32 | 2 | 6 |
| மூறை தோலா 1க்கு | 45 | 14 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 69 | 12 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 11 | 6 |

---

### அனாதைச் சிறுவர்கள் பிடிக்கப்படுகின்றனர்

மதுரையில் வீடுவாசலின்றித் தெருக்களில் அலைந்து திரியும் அனாதைச் சிறுவர்களை மதுரைப் போலீசார் பிடித்துவருகின்றனராம். போர்ஸ்டல் ஸ்கூலுக்கு அனுப்ப உத்தேசிக்கப்படுகிறதாம். சமீபத்தில் நடந்த கலவரத்தில் இவர்கள் அதிகப் பங்கெடுத்துக்கொண்டார்களாம்.

---

### ஸோவியத் நண்பர்கள் மகாநாடு

தமிழ்நாடு ஸோவியத் நண்பர்களின் மகாநாடு ஒன்றைக் கூட்ட மதுரை நடைத் தொழிலாளர் சங்கம் தீர்மானித்திருக்கிறது.

---

### ஹிந்தி சிறப்புறும்

"ஒவ்வொரு மாகாணமும் தன்னுடைய பாஷையையும் அதன் இலக்கியத்தையும் வளர்க்க வேண்டும். எதிர்காலத்தில் ஹிந்தி சிறப்புற்று விளங்கு மென்பதில் எனக்குத் திடமான நம்பிக்கை உண்டு. நாட்டிலுள்ள மற்றெல்லா பாஷைகளும் செழிக்க வேண்டுமென்பதே எனது விருப்பம். அவற்றிற்குக் கேடு விளைவிக்கவோ, அவற்றின் வளர்ச்சியைத் தடை செய்யவோ யாரும் முற்படக்கூடாது" என்று அபோஹார் (பஞ்சாப்) என்ற இடத்தில் நடந்த அகில இந்திய ஹிந்தி சாகித்ய சம்மேளனத்தில் தலைமை வகித்த அலகாபாத் சர்வகலாசாலை உப அத்யக்ஷகர் ஆசிரியர் அமரநாத ஜா தமது தலைமை உரையில் கூறினார்.

---

### சென்னைச் சட்ட சபைக் காங்கிரஸ் கட்சி

சென்னை சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டம் ஜனவரி 9உ வெள்ளிக்கிழமை பகல் 12 மணிக்கு தியாகராய நகர் ஹிந்திப் பிரசார சபை ஆபீஸில் கூடும் என்று ஷை கட்சிக் காரியதரிசி ஸ்ரீ எஸ். ராமநாதன் தெரிவித்திருக்கிறார்.

---

### இந்திய சாஸ்திர காங்கிரஸ்

இந்திய சாஸ்திர காங்கிரஸ் ஜனவரி 2-ந்தேதி முதல் 6-ந்தேதி வரை பரோடாவில் நடக்கும்.

---

கில்பர்ட் தீவுகளிலிருந்து ஐரோப்பியர் வெளியேற்றப்பட்டு விட்டனர். இத் தீவுகளில் ஒன்றான ஆபியாங் தீவில் ஜப்பானியத் துருப்புகள் டிசம்பர் 23-ந் தேதி இறங்கின.

---

சுமாத்ரா தீவின் மேற்குக் கரையோரத்திலுள்ள மீடான் விமான நிலையம் ஜப்பானிய விமானங்களால் தாக்கப்படுகிறது. மீடானுக்கு வெளியே 10 மைல் தூரத்தில் ஜப்பானிய பாரசூட் படைகள் இறங்கியிருக்கின்றனவாம். கடுமையான யுத்தம் நடக்கிறது.

## புதுவையில் தமிழ் இசைப் போட்டி

புதுவை வாலிபர் சங்கத்தின் 15-வது ஆண்டு விழாவை யொட்டி டிசம்பர் 20உ மாலை ஒரு தமிழ் இசைப் போட்டி நடத்தினர். அண்ணாமலை சர்வ கலாசாலை சங்கீதக் கல்லூரித் தலைவர் டைகர் வரதாச்சாரியாரும், ஸ்ரீ நீலமேகம் பிள்ளையும் ஜட்ஜுகளாக இருந்து போட்டிகளைப் பரிசிலனை செய்தனர். இந்தப் போட்டிக்காக சுவாமி சுத்தானந்த பாரதியார் இரண்டு பாடல்களை இயற்றி உதவியிருந்தார். ஸ்ரீமான்கள் பி.வி. ராமன், சுப்ரமண்யம் ஆகிய இருவரும் முறையே முதலாவதாகவும், இரண்டாவதாகவும், புதுவை ஸ்ரீ ஷண்முகம் மூன்ருவதாகவும், ஸ்ரீமான்கள் ஜெயராமன், முருகசாமி 4வது 5-வதாகவும் தீர்மானிக்கப்பட்டனர்.

தீர்ப்பைக் கூறுகையில், இவ்வித போட்டியை நடத்திய சங்கத்தாரையும், இதற்குதவி யளித்த மற்றும் ஏனையோரையும் பாராட்டிப் பேசி ஸ்ரீ டைகர் வரதாச்சாரியார் மேலும் கூறுகையில், வாய்ப்பாட்டில் வெற்றி ஏற்படுவதற்கு நல்ல சாரீரமும், இராக ஞயமும், தாளக் கட்டும் பாடும் பாவனை முதலியனவும் எல்லாம் ஒருங்கு சேர்ந்தமைந்திருக்க வேண்டு மென்று கூறினர்.

## ஸ்ரீ ரமண ஜயந்தி

நாளது மார்கழி மீ 20உ திருவண்ணாமலை ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் வழக்கம் போல் ஸ்ரீ ரமண மஹரிஷிகளுடைய ஜயந்தி மஹோத்ஸவம் கொண்டாடப் பெறும்.

## ஸ்ரீ மீனாட்சி சங்கம் லட்சுமிபுரம்

ஷை சங்கத்தின் மாதக் கூட்டம் நாளது மார்கழித் திங்கள் 10-ம் நாள் மாலை 4 மணிக்கு புதுக்கோட்டை மகாராஜா கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர் திரு பண்டித வித்வான் வி. கனகராஜய்யரவர்கள் தலைமையில் நடைபெற்றது. சொக்கலிங்க வித்தியாசாலை மாணவ மாணவிகள் பிரசங்கம், பாட்டு, தேவாரம், கும்மி, கோலாட்டம் முதலியன நிகழ்த்தினர்.

## நியூயார்க் நகரம் 6 பவுனுக்கு விற்கப்பட்டது

320 வருஷங்கட்கு முன் நியூயார்க் நகரம் 6 பவுன்களுக்கு விற்கப்பட்டது. இப்போது அது பதிமூன்று மைல் நீளமும் ஒன்றரை மைல் அகலமும் உடையது. இப்போது ஏக்கர் ஒன்றுக்கு 2½ லட்சம் பவுன் பெறுமதியுள்ளது. அந்தக் காலத்தில் அச்சிறு தீவில் ஒரு சில வீடுகளேயிருந்தன. மீதியிடமெல்லாம் சுதேச இந்தியருடைய வேட்டையாடு மிடமாகஇருந்தது. ஒரு டச்சுக்காரர் அதை 24டாலர்கொடுத்து விலைக்கு வாங்கினர்; 12 ஏக்கருக்கு ஒரு பென்னி ஆகிறது. புது ஆம்ஸ்டர்டாம் என்று பெயரிட்டார். அவர் தமது தேசத்தார் சிலரையும் வரவழைத்துக் குடியேற்றினர். ஆனல் அவரது குடியேற்றத் திட்டம் அவ்வளவு அபிவிருத்தியடையவில்லை. முப்பது வருடங்கட்குப் பிறகு வாழ்ந்த வெள்ளையர் தொகை ஆயிரத்துக்கும் குறைவாகவே யிருந்தது. எனவே 1664ல் அத்தீவு ஆங்கிலேயர் கைக்கு மாறியபோது டச்சுக்காரர்கள் அதைப்பற்றிக் கவலைப்பட வில்லை. கர்னல் நிக்கால்ஸ் என்பவன் அதற்கு நியூயார்க் என்று பெயரிட்டான். இன்று உலகில் பெரிய நகராக மிளிர்கிறது.

## உத்யோக மாற்றம்

கோவை அடிஷனல் ஜில்லா ஜட்ஜ் ஸ்ரீ வ. அனந்தராம ஐயர் ராமநாதபுரம் சப் ஜட்ஜாகவும், ஸ்ரீ பி. வி. கிருஷ்ணசாமி ஐயர் கும்பகோணத்துக்கும், கும்பகோணம் சப் ஜட்ஜ் ஸ்ரீ பி. வி. சுந்தரம் ஐயங்கார் சிவகங்கைக்கும் மாற்றப்பட்டிருக்கின்றனர். சிவகெங்கை சப் ஜட்ஜ் ஸ்ரீ நீலகண்ட சாஸ்திரி மாயவரத்துக்கு மாற்றப்பட்டிருக்கிறர்.

## மிதக்கும் தொழிற்சாலை

ரிப்பேர் செய்வதற்கான யந்திரசாதனங்களுடன் கூடிய கப்ப லொன்று அமெரிக்காவில் மிதக்க விடப்பட்டிருக்கிறது. இதை மிதக்கும் தொழிற்சாலையென்றே கூறலாம்.

## ஹோட்டல்களில் சாதி வித்தியாசம்

சாதி வித்தியாசங்களை அகற்றுத காபி ஹோட்டல்களுக்கு லைசென்ஸ்கள் கொடுக்க மறுக்கும் அதிகாரத்தை முனிசிபல் கவுன்சில்களுக்குக் கொடுக்கும் முறையில் ஜில்லா முனிசிபாலிடிகளின் சட்டத்தைத் திருத்தும்படி சேலம் நகர சபை சென்னை சர்க்காரைக் கேட்டிருக்கிறது.

## பிரபல குற்றவாளி பிடிபட்டான்

ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களின் போலீஸார் வெகு நாட்களாகத் தேடிவரும் வதுவார்பட்டி ஜான் வெள்ளைச்சாமிக் குறவன் சாத்தூர் தாலுக்கா முத்துசாமிபுரம் கிராமத்தில் வெம்பர் வேட்டை போலீஸ் சப் இன்ஸ்பெக்டரால் தந்திரமாகக் கைது செய்யப்பட்டான். எதிரி சாத்தூர் சப் ஜெயிலில் வைக்கப்பட்டிருக்கிறன். அவனிடம் 5 தோட்டாக்கள் கொண்ட லைசென்ஸ் இல்லாத ரிவால்வர் ஒன்றும் இருந்ததாம்.

## பர்மாப் பாதுகாப்பை ஜெனரல் வேவல் ஏற்றுக் கொண்டார்

இந்திய சேனதிபதி ஜெனரல் வேவல் பிரிட்டிஷ் சர்க்காரின் அதிகாரத்துக் குட்பட்டு, பர்மாவின் பாதுகாப்பையும் ஏற்றுக் கொண்டிருக்கிறர். பர்மாவின் புதிய படைத்தலைவர் லெப்டினன்ட் ஜெனரல் ஹட்டன்; இவர் இந்தியாவில் வேவலின் கீழ் நிர்வாகத் தலைவராக இருந்தவர். இந்தியாவைப் பாதுகாப்பதற்கு பர்மாவின் பாதுகாப்பும் அவசியம் என்பதை இந்நியமனம் காட்டுவதாகச் சொல்லப்படுகிறது. ரங்கூனைப் பாதுகாப்பதில் சில அமெரிக்க விமானங்களும் ஈடுபட்டிருக்கின்றனவாம். பர்மாவைப்போலவே இலங்கையும் ஜெனரல் வேவலின் பாதுகாப்புக்கு உட்பட்டது. இவர் இந்திய சர்க்காரின் அதிகாரத்துக்கு உட்பட்டவரல்ல; நேரே பிரிட்டிஷ் சர்க்காருக்கு உட்பட்டவராவர்.

## சென்னை சர்க்கார் வேண்டுகோள்

தூரக்கிழக்கில் ஏற்பட்டுள்ள நிலைமை காரணமாக சென்னையில் பீதி ஏற்பட்டிருப்பதை யொட்டி சென்னை சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். அதில் தற்போது பீதிக்கு அவசியம் இல்லை என்றும், நெருக்கடி ஏற்பட்டால் ஜனங்களை வெளியேற்றுவதற்கான திட்டங்களை அவர்கள் தயாரித்து வருவதாகவும், சௌகர்யம் உள்ளவர்கள் இப்பொழுதே வெளியூர்களில் போய்த் தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்து கொள்வதில் சர்க்காருக்கு யாதொரு ஆக்ஷேபணையும் இல்லை யென்றும் தெரிவித்துள்ளனர்.

## கோலாப்பூர் வார்சு

1940 நவம்பரில் கோலாப்பூர் மகாராஜா ஸர் ராஜாராம் சத்ரபதி மகராஜ் காலமான பிறகு அவருக்கு வார்சு நியமிக்கும் விஷயம் வைஸ்ராயின் பரிசிலனையில் இருந்து வந்தது. சிவாஜி மகாராஜாவின் சந்ததியைச் சேர்ந்த நாஞசாகிப் சங்கரராவ் பான்ஸலேயின் இரண்டாவது புத்திரரான பிரதாப் சிங்கை, கோலாப்பூர் மகாராணியின் சம்மதத்துடன் புதிய மகாராஜாவாக வைஸ்ராய் தேர்ந்தெடுத்திருக்கிறர். இவரைத் தமது புத்திரராக ஸ்வீகரித்துக் கொள்ள மகாராணி இசைந்திருக்கிறர்.

தியோலி முகாமிலுள்ள பாதுகாப்புக் கைதிகள் தங்களிடையே ரூ 300 வசூலித்து ரஷ்யாவுக்கு உதவும்படி பம்பாய் சர்க்காரிடம் கொடுத்திருக்கிறர்களாம்.

## வெடிகுண்டுக்கு சாத்விக எதிர்ப்பு!

கல்கத்தாவையடுத்த சந்திரநாகூர் விமானப்படை எடுப்புக்குள்ளானல் அதை 'சாத்வீகமுறை'யில் எதிர்ப்பதைப் பற்றி ஆலோசிக்க சமீபத்தில் சந்திரநாகூர் அட்மினிஸ்டிரேட்டர் நகரிலுள்ள பிரபலஸ்தர்கள் கூட்டம் ஒன்றைக் கூட்டினர். ஏற்கெனவே சிகிச்சைக்கான அவசர முறைகள் ஏற்பாடு செய்யப்பட்டுவிட்டன. வீடுகள் தோறும் "பாதுகாப்புக் குழிகள்" வெட்டி அபாய அறிவிப்பின்போது வீட்டார்கள் அக் குழிகளுக்குள் சென்றுவிட வேண்டுமென்று யோசனை சொல்லப்பட்டிருக்கிறதாம்.

## இலக்கிய வளர்ச்சிக் கழகம் அரிமழம்

இக்கழகத்தின் சார்பில் நிகழும் மார்கழி 12-ம் நாள் வெள்ளிக்கிழமை காலை 10 மணிக்கு அரசாங்க மத்யதரப் பாடசாலைத் தலைமை ஆசிரியர் T. S. கோபால அய்யங்காரவர்கள் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. A. கணேசய்யரவர்கள் "பெரியபுராணம்" என்பதுபற்றி சொற்பொழிவாற்றினர்.

### தனவைசிய இளைஞர் சங்கம்

இச்சங்கத்தின் நாலாவதாண்டு நிறைவு விழா நிகழும் மார்கழித் திங்கள் 10ம் நாள் (24-12-41) புதன்கிழமை மாலை 5 மணிக்கு உயர்திரு கு. பெரி. பெரியகருப்பஞ் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழ்ப் புலவர் திரு. கு. மதுரை முதலியாரவர்கள் "மணிமேகலையின் மாண்பு" என்பதுபற்றி விரிவுரை நிகழ்த்தினர். சொற்பொழிவின் இடையே அண்ணாமலை பல்கலைக் கழகம் இன்னிசைக் கல்லூரி மாணவர் திரு. க. தங்கவேலு கீதம் பாடினர்.

## ஸ்ரீ சரத் சந்திர போஸ்

ஜப்பானியருடன் தொடர்பு வைத்திருந்ததாகச் சொல்லிக் கைது செய்யப்பட்ட ஸ்ரீ சரத்சந்திர போஸ் சென்னை வழியாகத் திருச்சி கொண்டுவரப்பட்டு, அங்கு மத்திய சிறையில் கைதியாக வைக்கப்பட்டிருக்கிறர்.

## போர்டு ஸ்கூல் அங்கீகாரம்

ராமநாதபுரம் ஜில்லா போர்டின் நிர்வாகத்திலிருக்கும் 78 எலிமெண்டரிப் பள்ளிக்கூடங்களில், சில குறைபாடுகள் இருப்பதாகக் கருதி சர்க்கார் 32 பள்ளிக்கூடங்களின் அங்கீகாரத்தை ரத்து செய்திருந்தனர். ஆனல் அவற்றுள் 27, குறைபாடுகளைப் பூர்த்தி செய்து விட்டன என்று அவற்றின். அங்கீகாரம் மீண்டும் உயிர்ப்பிக்கப் பெற்றிருக்கிறது.

## சென்னை கவர்னர் யுத்த நிதி

டிசம்பர் 24-ந்தேதி வரை மொத்தம் சேர்ந்த தொகை ரூ 1,78,00,021-14-8. இதில் ராமநாதபுரம் ஜில்லா அளித்தது ரூ 10,11,957-15-3. சென்னை விமானப் படைப் பிரிவுக்கு விமானங்கள் வாங்க 30உ லண்டன் விமான மந்திரிக்கு 4 லட்ச ரூபாய் அனுப்பப்பட்டிருக்கிறது. இது வரை மொத்தம் அனுப்பிய தொகை ரூ ஒரு கோடி ஐம்பத்தெட்டு லட்சமாகும்.

இலங்கையிலிருந்து இந்தியா வரும் பிரயாணிகளின் தொகை அதிகரித்து வருவதாகத் தெரிகிறது. முன் கூட்டியே பலர் டிக்கட்டுகளை வாங்கிக் கொண்டிருக்கிறர்களாம். தினசரி 600 பேர் வீதம் வெளியேறுவதாகச் சொல்லப்படுகிறது.



## கல்கத்தா—சங்கிங் விமானப் போக்குவரத்து

சீனு—பர்மா பாதையை விஸ்தரித்து கல்கத்தாவுக்கும் சங்கிங்குக்கும் விமான இணைப்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தப் போக்குவரத்து வாரம் இருமுறை நடைபெறுமாம். 2000-க்கு அதிகமான கிலோமீட்டர் தூரமுள்ள இந்தப் பிரயாணம் 8½ மணி நேரத்தில் முடிகிறது. இடையில் இரண்டு ஸ்டேஷன்களே யிருக்கின்றன. இந்த சர்வீஸ் காரணமாக சீனவுக்கும் உலகிலுள்ள இதர பாகங்களுக்கும் தொடர்பு ஏற்படும். முதல் விமானம் டிசம்பர் 19-உ கல்கத்தா வந்து 26-உ திரும்பியது.

## இசையும் மொழியும்

### ஸ்ரீ அரியக்குடி ராமானுஜய்யங்கார் அபிப்பிராயம்

சென்னையில் கூடிய சங்கீத வித்வத் சபையில் ஸ்ரீ அரியக்குடி ராமானுஜய்யங்கார் பேசும்போது, சங்கீதமே ஒரு தனி பாஷை யென்றும், பாஷைகள் சம்பந்தப்பட்டமட்டில் சங்கீதத்திற்கு எவ்வித பாரபட்சமும் கிடையாதென்றும், சகல பாஷைகளும் சம அந்தஸ்துக் கொண்டவையாய் இருப்பதால், பாஷைப் பிரச்னையைப் புகுத்த முயற்சிப்பது பெரும் பாதகமாகு மென்றும், சங்கீதத்திற்கு நாதம் தான் பிரதானமான தென்றும், தமிழ்ப் பாஷையில் தகுதியான கிருதிகளும், வர்ணங்களும் நிரம்பத் தோன்றத் தோன்ற அவற்றை வித்வான்கள் பிறர் கிளர்ச்சியின்றியே கையாள்வதற்கு ஆட்சேபமில்லை யென்றும் குறிப்பிட்டார்.

ஷை மகாநாட்டின் நிபுணர்கள் கமிட்டி கர்நாடக சங்கீதத்தின் உயர்ந்த தரத்தைப் பாதிக்கும்படி பாஷாப் பிரச்னையைப் புக விடக்கூடாதென்று அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறது.

## அரியக்குடியில் தேசியக் கொடியேற்று விழா

30-12-41 மாலை 6.30 மணிக்கு ராமசாமி அம்பலம் தலைமையில் ஹரிஜனச் சேரியில் ராமகருப்பன் செட்டியார் அவர்கள் கொடியேற்றுவித்து கொடியின் தத்துவமும், கல்வியும் பற்றிப் பேசினர். தோழர்களான எஸ். எஸ். வாஸன், மதுரை சுப்பிரமணியம், அருள்சாமி, உன்னிகிருஷ்ணன், சீனிவாசன், கிருஷ்ணன் முதலானவர்கள் தீண்டாமை விலக்கு, காங்கிரஸ் நோக்கம், மதுவிலக்கு, நூல் நூற்பு இவைகளைப்பற்றி மிக விளக்கமாகப் பேசினர்.

## திருவாங்கூர் நாஷனல் பாங்கு

திருவாங்கூர் நாஷனல் அன் கொல்லம் பாங்கிக்குப் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள கடன்காரர்கட்கு மேற்கொண்டு ரூபாய்க்கு 3 அணு வீதம் ஈவுத் தொகை கொடுக்கும்படி சென்னை ஹைக்கோர்ட் ஜட்ஜ் கனம் வெங்கட்ரமண ராவ் உத்தரவிட்டிருக்கிறர்.

## நேரு கிளப் திறப்புவிழா

டிசம்பர் 28உ ஸ்ரீமான் மு. செ. மு. சேக்கப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் ஒக்கூரில் நேரு கிளப்பின் திறப்பு விழா நடைபெற்றது. சிலர் சொற்பொழிவாற்றினர்கள்.

## இராமகிருஷ்ண விவேகானந்த சங்கம் காரைக்குடி

நிகழும் மார்கழி மீ 14உ மாலை நடைபெற்ற நிர்வாக சபைக் கூட்டத்தில் அடியிற்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின:—

மாகாணங்களில் ஆலோசனையாளர்கள் உதவியுடன் நடக்கும் கவர்னரின் ஆட்சி நீங்கவேண்டுமென்று இச்சங்கம் அபிப்பிராயப்படுகிறது. வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் கர்ப்பாளரான ஸ்ரீ வா. தி. பஞ்சாட்சர முதலியாரின் மரணத்திற்கு இக்கூட்டம் அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது. திருச்சி ரேடியோ நிலயத்தில் நடைபெறும் சங்கீதக் கச்சேரிகளில் பூராவும் தமிழ்ப் பாட்டுகளையே பாடச் செய்வதோடு தமிழர் தம் மொழி, கலைகளின் வளர்ச்சிக்குரிய பேச்சுகளும் பாடல்களுமே அதிகமாய் நடைபெற வேண்டுமென்றும் ரேடியோ நிலைய அதிகாரிகளைக் கேட்டுக்கொள்கிறது.



## கம்பை தனவைசியர் ஹைஸ்கூல்

### 1940-41ம் வருட அறிக்கை

கம்பை தனவைசியர் ஹைஸ்கூலின் 12-வது ஆண்டுவிழா டிசம்பர் 7-ந்தேதி பர்மா கல்வி மந்திரி கனம் ஊ பா ஈன் தலைமையில் நடைபெற்ற விவரம் சென்றவாரம் வெளியாகியிருக்கிறது. அப்போது வாசிக்கப்பெற்ற 1940-41-ம் வருட அறிக்கையில் கண்டுள்ள சில முக்கிய விஷயங்கள் வருமாறு:—

இவ்வருஷம் மாணவர் தொகை அதிகரித்திருக்கிறது. தங்கிப் படிப்பவர் தொகை 70; வெளியிலிருந்து வந்து படிப்பவர் தொகை 292. முன் வருஷம் இவை முறையே 74ம் 189ம் ஆக இருந்தன. பர்மிய, ஹிந்தி மாணவர்கட்காக விசேஷ வசதி செய்யப்பட்டிருக்கிறது. ஒரு சூப்பிரண்டும் 21 ஆசிரியர்களு மிருக்கின்றனர். சங்கீதத்துக்குத் தனி ஆசிரியர் நியமிக்கப்பட்டிருக்கிறர். ஏ. வி. ஹைஸ்கூல் பரீட்சைக்குச் சென்ற 5 மாணவர்களில் 4 பேர் வெற்றிபெற்றனர். ஆர். யம். சேதுராமனுக்குக் காலேஜ் ஸ்காலர்ஷிப்பும் வி. யன். கிருஷ்ணனுக்கு பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்க ஸ்காலர்ஷிப்பும் கிடைத்தன. ஹைஸ்கூலைப் பரிசோதனை செய்த பிரதம இன்ஸ்பெக்டரும், உதவி இன்ஸ்பெக்டர்களும் ஸ்கூல் திறமையாகவும் நல்ல முறையிலும் நடத்தப்படுவதாகத் தங்கள் குறிப்பில் தெரிவித்திருக்கின்றனர். மாணவர் சாரணப்படைகள் திறமையாக அமைந்துள்ளன. சகல பொது வைபவங்களிலும் அவை கலந்து பேர்பெற்றுள்ளன.

டாக்டர் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் தங்கப் பதக்கப் போட்டிகளில், ஆங்கிலத்தில் கே. டி. அண்ணாமலையும், தமிழில் வி. டி. முத்தையாவும், பர்மிய மொழியில் லஜபத் சர்மாவும், சங்கீதத்தில் யஸ். ராஜாராமும், உடற்பயிற்சியில் யஸ். யம். சொக்கலிங்கமும், தமிழ்க் கணக்கில் கே. அடைக்கப்பனும், தமிழ் வரவு செலவு கணக்கு முறை—வர்த்தகக் கடிதப் போக்குவரத்து இவற்றில் கே. ஆர். ஆதப்பனும் வெற்றிபெற்றர்கள். பழைய மாணவர் சங்கம் இவ்வருடம் ஸ்தாபிக்கப் பெற்றது. திரு. ஆர். யம். சோமசுந்தரம் செட்டியார் இதன் தலைவர். திரு. A. P. S. முத்தையா செட்டியார் இதன் காரியதரிசி. கனம் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்களும் கனம் யம். வி. டி. யம். முத்தையா செட்டியாரவர்களும் ஆயுள் கால (Patrons) உதவியாளர்களாகும். சென்ற செப்டம்பர் மாதம் கனம் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்களின் ஷஷ்டியப்த பூர்த்தியை ஹைஸ்கூல் கொண்டாடியது. ஸ்கூல் லைப்ரரியில் 3700 புஸ்தகங்கள் இருக்கின்றன. இங்கேயே தங்கிப்படிக்கும் மாணவர்கட்கு இராப் படிப்புக்கு வசதி செய்யப்பட்டிருக்கிறது. ஒரு டிஸ்பென்ஸரியுமிருக்கிறது.

## பர்மாவில் முதலாவது நகர சபை ரேடியோ

பர்மாவில் முதன்முதல் பொதுமக்கள் கேட்டின்புற ரேடியோ ஸெட் அமைத்துள்ள நகரசபை சயிட்டோதான். இந்த ரேடியோ செட்டை நன்கொடையாக அளித்தவர் திரு. ராம. அண. அண்ணாமலைச் செட்டியாரவர்களாகும். அதை 5—12—41 மாலை ஜில்லாக் கலக்டர் ஊக்கின் மௌங்யி ஐ. வி. எஸ். திறந்துவைத்தார். இவ் வைபவத்தை முன்னிட்டு நகரின் மத்தியிலுள்ள பூந்தோட்டத்தில் ஒரு தேநீர் விருந்தும் நடைபெற்றது.

## சென்னைப் பொதுவுடமைச் சதி வழக்கு அப்பீல்

சென்னைப் பொதுவுடமைச் சதி வழக்கில் தண்டிக்கப்பட்டுத் தப்பி ஓடிய ஸ்ரீ ஹனுமந்தராவ் நீங்கலாக ஸ்ரீ மோகன் குமாரமங்கலம் முதலிய மற்ற 6 பேர்கள் சார்பில் தாக்கலான அப்பீல் மனுக்கள் ஹைக்கோர்ட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. 4-வது எதிரி ஸ்ரீ கோஸியன் 7வது எதிரி ஸ்ரீ உமாகாந்த ராவ் ஆகிய இருவர் சார்பாகத் தாக்கல் செய்யப்பட்ட ஜாமீன் மனுக்கள் 19உ விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டு ஜனவரி 5-ந் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டன.







## வருமான வரி வருமானம்

### மொத்தம் 19 கோடி ரூபாய்

இந்திய சர்க்கார் வருமான வரி இலாகாவின் 1939-40ம் வருட நிர்வாக அறிக்கை வெளியாகியிருக்கிறது. வரி விதிக்கப்பட்டோர் கொடுத்துள்ள புள்ளி விவரத்தை மட்டும் வைத்துக் கணக்கிட்டிருந்தால் சுமார் மூன்றேகால் கோடி ரூபாய் சர்க்கார் வருமானத்தில் நஷ்டம் ஏற்பட்டிருக்கும். இலாகாவின் ஜாக்கிரதையே இந்த நஷ்டம் தடுக்கப்பட்டதன் காரணமாகும். புதிதாக 36,000 பேர்கட்குமேல் வரி விதிக்கப்பட்டது. முக்கிய ஜாப்தாவிலிருந்து சுமார் 38,000 பேர் எடுபட்டனர். இரட்டைக் கணக்கு, பொய்க் கொள்முதல் ஏடு, விற்பனை விவரத்தை மறைத்தல், கிளை ஸ்தாபன வருமானத்தை ஏறிடாமை, பொய்ப் பேரால் கணக்கு வைத்தல், வட்டி சம்பளம் கொடுத்தல் முதலியன மூலம் சூழ்ச்சிகள் செய்யப்பட்டனவாம். பிரஸ்தாப வருடம் வருமான வரி உபரி வரி எல்லாம் சேர்த்து மொத்தம் விதிக்கப்பட்ட தொகை ரூ 20 கோடிக்கு மேலாகும்; வசூலான தொகை சுமார் 19 கோடி.

திருவாங்கூர் நாஷனல் அண் கொல்லம் பாங்க் முறிந்தது, தெலுங்கு ஜில்லாக்களில் ஏற்பட்ட புயல் சேதம் இவை எல்லாம் கைத் தொழிலையும், வர்த்தகத்தையும் அதிகம் பாதித்தன. பருத்தி நூற்றல், நெய்தல் தொழில் நன்கு நடைபெற்றது. எலைகுத் தொழிலும் அப்படியே என்று அறிக்கை கூறுகிறது.

## பத்திரிகைக்காரர்கள் நிரந்தரக் கமிட்டிக் கூட்டம்

ஸ்ரீமான் கே. ஸ்ரீனிவாஸன் தலைமையில் கல்கத்தாவில் டிச. 18-உ கூடிய பத்திரிகைக்காரர்கள் நிரந்தரக் கமிட்டிக் கூட்டத்தில் கீழ்க்கண்ட சில தீர்மானங்கள் செய்யப்பட்டன:—

(1) கப்பல் போக்குவரத்து வசதி சரியாக வில்லாததால் எல்லாவித காகித ஸ்டாக்குகளையும் சர்க்காரே ஏற்று நியாயமான விலைக்கு அவசரமாக வேண்டிய பத்திரிகைகளுக்கு அவைகளை விநியோகம் செய்ய வேண்டும். (2) பத்திரிகைக் காகிதங்களை வாங்கி விற்கும் வியாபாரிகள் கொள்ளை லாபம் அடிப்பதைத் தடுக்க, காகித ஆலைகள் தங்கள் உற்பத்தியில் ஒரு பாகத்தை நிர்ணயிக்கப்பட்ட விலைக்கு நேராகப் பத்திரிகைகளுக்கு விற்க வேண்டும். (3) "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" கோர்ட்டு அவமதிப்பு வழக்கில் யாரைப்பற்றிக் கண்டனம் தெரிவிக்கப்பட்டதோ அவரே நீதிபதியாக இருந்து வழக்கை நடத்திய முறை சரியல்ல வென்றும், அந்தச் சட்டத்தையே திருத்த வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறது. ஷை வழக்கில் நிருபருக்கு அபராதம் செலுத்த இடந்தராமல் தண்டனை மட்டு மளித்ததால் ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி சிறைசெல்ல முன்வந்ததைப் பாராட்டுகிறது.

## காங்கிரஸ் கமிட்டிகள் முன்போல் வேலை செய்யலாம்

மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகள் ஆகியவற்றின் மெம்பர்கள் விடுதலையடைந்து விட்டால் அவை மறுபடியும் முன்போல் சகஜமாக வேலை செய்யலாம் என்று காங்கிரஸ் அக்கிராஸனர் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறர். சென்ற 15 மாதங்களில் ஷை கமிட்டிகள் ஒருபோதும் சஸ்பெண்டு செய்யப்படாததால் சகஜம்போல் வேலை செய்யலாம் என்று மௌலான அறிக்கையில் கூறுகிறர்.

## 500 வருட விதை

500 வருடத்துக்கு முன்னுள்ளது என்று கருதப்படும் ஒரு தாமரை விதை ஸெண்ட் லூயி என்ற இடத்திலே முளைத்து விட்டதாம். அது கூடிய சீக்கிரம் பூக்கும் என்றும் நிபுணர்கள் நம்புகிறர்களாம்.

ஏழைகளுக்கு மலிவான விலையில் தானியங்களை விற்பதற்காக நகரில் தானியக் கடைகளை ஆரம்பிப்பதற்காக டில்லி முனிசிபாலிடி ரூ ஒரு லக்ஷம் சாங்க்ஷன் செய்திருக்கிறது.

## லண்டனில் தாகூர் கூட்டம்

ரவீந்திரநாத் தாகூர் ஞாபகார்த்தமாகச் சென்ற செப்டம்பர் மாதம் லண்டனில் நடந்த கூட்டத்தில் அவருடைய மேதையில் ஏதாவது ஒரு அம்சத்தை எடுத்துரைப்பதற்காக வருஷ மொருமுறை கூட்டங் கூட்ட வேண்டுமென்று ஸர் வில்லியம் ராதன்ஸ்டைன் கொண்டுவந்த தீர்மானம் நிறைவேறியதல்லவா? அதன்படியே முதல் வருஷாந்தத் தாகூர் கூட்டம் டிசம்பர் 18உ நடைபெற்றது. கவிஞர் பெருமானை ஐரோப்பாவில் சந்தித்து அவருடைய முன்னிலையிலேயே அவரது கவிதைகளைப் பாடிக்காட்டியவரான ஸ்ரீமதி ராயிப் மார்ல் "சித்ரா" என்னும் நாடகத்தில் சில காட்சிகளை நடித்துக் காட்டினார். மி. சுதின்கோஷும். சங்கீத வித்வான் மி. முகர்ஜியும் அவருடன் சேர்ந்து நடித்தனர். "ஓவர்சீஸ் ஹௌஸ்" என்னுமிடத்தில் நிகழ்ந்த இந்நிகழ்ச்சியை ஏராளமானவர்கள் கண்டு அனுபவித்தார்கள்.

## வைப்பாட்டி மகனுக்கு ஜீவனாம்சம்

வைப்பாட்டி மகனுக்கு ஜீவனாம்சம் அளிக்கும்படி சிர்காழி ஜில்லா முன்சீபால் அளிக்கப்பட்ட தீர்ப்பின் பேரில் தொடரப்பட்ட அப்பீலில் கிழத்தஞ்சை ஜில்லா ஜட்ஜ் டிச. 8-உ அளித்த தீர்ப்பில் முன்சிப் தீர்ப்பை ஊர்ஜிதம் செய்ததோடு, வாதிக்குச் செலவுத் தொகை கொடுக்கும்படியும் குறிப்பிட்டார்.

## விரையாச்சிலை இளைஞர் சங்கம்

விரையாச்சிலை இளைஞர் சங்கத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவுவிழா 12-12-41 மாலை 4-30 மணிக்கு மு. ராம. மடத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரா யிருந்த மகிபாலன்பட்டி முதுபெரும் புலவர் பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. வரவேற்புப் பத்திரம் படித்தளிக்கப் பெற்றவுடன் தலைவர், பண்டிதமணி அவர்கள் கல்விச் சிறப்பையும் அஃது இளைஞர் சங்கத்தாரால் செவ்வனம் வளர்க்கப்பட வேண்டுமென்பதையும் பற்றி அரியதோர் முன்னுரை கூறி மகிழ்வித்தார்கள். பின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து சீனியர்த் தமிழ்ப் பண்டிதர் திரு. பண்டித லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள், "உளங்கவர் கவிகள்" என்னும் பொருள்பற்றியும், திருச்சி தமிழ்ப் பண்டிதர் வித்வான், திரு. ஐயம்பெருமாள் கோனாரவர்கள் "கவியின்பம்" என்னும்பொருள் பற்றியும் சொற்பொழிவாற்றி மகிழ்வித்தார்கள். பின் தமிழ் இசை வளர்ச்சி பற்றியும் அதனை இக்காலத்து வளர்க்கின்ற பெரியார்களைப் பாராட்டியும் இரண்டு தீர்மானங்கள் ஒருமனப்படக் கீழ்க்கண்டவாறு நிறைவேற்றப்பட்டன. அத்தீர்மானங்களை யொட்டிப் பண்டிதமணியவர்கள் பேசியபோது இசைத் தமிழ் என்னும் பெயரே தமிழில் சிறந்த இசைப் பகுதி புண்மைக்குச் சான்றாமெனவும், தமிழிசை தொன்று தொட்டதெனவும், அதனை வளர்த்தல் ஒவ்வொரு தமிழனுக்கும் கடமையாமெனவும், அதனைப் பெரும் பொருள் வழங்கித் தளராது வளர்க்கின்ற கனம் டாக்டர், செட்டிநாட்டு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்களின் நுண்ணறிவும் வள்ளன்மையும் பெரிதும் பாராட்டத்தக்கன என்றும் கூறினார்கள். பின் இலக்கியங்களிலிருந்து பல கவிச் சுவைகளை எடுத்து விளக்கி முடிவுரை கூறி சபையோரை பரவசப்படுத்தினார்கள். பின் மு. வயிரவன் செட்டியாரவர்கள் வந்தனங்கூற இரவு 9 மணிக்கு விழா இனிது நிறைவேறியது. தீர்மானங்கள்: (1) தமிழ் நாட்டில் நிகழும் கச்சேரிகளில் எல்லாம் தமிழ் பாட்டுகளையே பாடச் செய்வதிலும் இன்னும் தமிழிசை வளர்ச்சிக்குரிய பிற துறைகளிலும் முயல வேண்டுமென்று இச்சங்கம் தீர்மானிப்பதோடு அவ்வாறே செய்ய மற்றைய அன்பர்களையும் வேண்டிக்கொள்கிறது. (2) தமிழிசை வளர்ச்சி குறித்துப், பெரும் பொருள் வழங்கி ஆதரி[illegible]த் தளராது முயன்று வரும் பெரு[illegible]கொடை வள்ளலாகிய செட்டிநாட்டு ராஜா ஸர் அண்ணாமலை செட்டியாரவர்களையும் அவர்களுக்கு இத்துறையில் உதவி புரிந்தவரும் பெருமக்களையும் இச்சங்கம் பாராட்டுகிறது.

## தமிழுக்கு நல்ல காலம் பிறந்திருக்கிறது

### திருச்சி மாநாட்டில் திரு. சொ. முருகப்பா பிரசங்கம்

(நமது நிருபர்)

'குமரன்' ஆசிரியர் திரு. சொ. முருகப்பா அவர்கள் திருச்சி தமிழ் இசை மாநாட்டில் நிகழ்த்திய உரையின் சாரம் வருமாறு:—

தமிழ் நாட்டில் தமிழ் மக்கள் தமிழ் இசை வளரவேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். தமிழ்ப் பாடல்களைக் கேட்க ஆசைப்படுகிற காலம் வந்த பொழுதே தமிழ் இசை வளர்ந்தோங்கும் காலம் வந்துவிட்டது. புதிதாக எது வந்தாலும் அதன்மீது மோகங்கொள்ளும் உணர்ச்சி தமிழ் மக்களுக்குப் பொதுவான தொன்றாகும். தெரிந்தும் தெரியாமலும் இந்த மோகம் ஏற்படுகிறது. புதிதாக வருகிறவர், தமிழ் மோசம் என்று சொன்னால் அதைத் திருப்பிச் சொல்லவும் தயாராயிருக்கிறோம். இதனால் பிற மொழியை வேண்டாம் என்று சொல்லவில்லை. எந்த வேஷத்தைப் போட்டாலும் தமிழன் தமிழனே என்பதை உணரவேண்டும். தமிழிலே பேசவாது, தமிழிலே பாடவாது என்று சொல்பவரைத் தமிழர் கூட்டத்தில் சேர்க்க இடமில்லை. இந்தியாவிலே பிறந்த எல்லோருக்கும் இந்தியர் என்ற உணர்ச்சி வேண்டும் என்று விவேகானந்தர் சொன்னார். அதுபோல, 'நான் தமிழன்' என்று தலை நிமிர்ந்து சொல்லும் நாளன்றுதான் தமிழ்நாடு சிறக்கும்.

இசை நுட்பம் அறிந்த பேர் சிலர் தாம். மற்றவர்கள் ஆயிரக்கணக்கிலிருக்கின்றார்கள். அவர்களும் இசையைக்கேட்டு ரசிப்பது அவர்களது உரிமை. மற்றவர்கட்குத் தெரியாதபடி பாடுவது தான் முறை யென்று சிலர் வைத்திருக்கிறார்கள். தமிழ் இசை வராது, அதற்கும் இசைக்கும் சம்பந்தமில்லை யென்று சொல்வதைப் பிசகு என்கிறோம். நமது நாட்டிலே எல்லாம் சங்கீத மயம்; வண்டிக்காரருக்குப் பாட்டு, கல்யாண வீட்டிலே பாட்டு, இழவுக்குப் பாட்டு; குழந்தையைத் தூங்க வைக்கவும் பாட்டு; தமிழ் நாட்டு மரங்கள் கூட சங்கீதத்தை ரசிக்கும் என்று ஆழ்வாராதிகள் பாடி யிருக்கிறார்கள். தமிழுக்கும் தமிழ் இசைக்கும் இப்போது நல்ல காலம் பிறந்திருக்கிறது.

வித்வான்கள், கச்சேரிகளில் தமிழ்ப் பாட்டை முன்னாலே பாடுகிறதில்லை யென்று சபதம் செய்து கொண்டிருக்கிறார்கள். பிள்ளையாரைக் கும்பிடத் தமிழில் பாட்டில்லையா? மங்களம் பாடவும் தமிழில் இல்லையா? துக்கடா என்று சொல்லிக் கடைசியில் தமிழில் பாடி வந்தார்கள். தமிழ் நாட்டில் தமிழைத் துக்கடாவாகப் பாடுவதைவிட வேறு பாஷைப் பாட்டைப் போடக் கூடாதா? முதலில் தமிழ்ப்பாட்டைப் போட்டு கடைசியில் விருப்பமுள்ளோர்க்குத் தெலுங்குப் பாட்டைப் பாடட்டுமே!

தமிழ் இசையைப் பரவச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் திடீரென்று அதிர்ச்சியினால் வந்ததல்ல. பத்து வருஷ காலமாக ராஜா அவர்கள் பல சந்தர்ப்பங்களில் கவனித்து, நியாயம், நேர்மையெனக் கண்டே இத் தொண்டிற்கு முன்வந்தார்கள். பிற மொழிப் பாட்டுகள் பாடும் போது, நமக்குப் பிடிக்கவில்லையானால் வெளியில் போய்விட்டால் விஷயம் தெரிந்து போகும். சங்கீதம் உணர்ச்சி ஊட்டவே வந்தது. பக்தர்கள் இசையைச் சேர்த்ததின் தத்துவம் இது தான். இப்போது இசைக்காகவே பாட்டு என்ற நிலைமைக்கு வந்துவிட்டது. தமிழ்ப் பாட்டே பாடமாட்டேன் என்று சொல்பவரை அந்நியராக ஒதுக்கவேண்டும். மற்றவர்கள் சில தெலுங்குப் பாட்டுகளைப் பாடட்டும், கேட்போம். தமிழ் வித்வான்களும் பெரிய வித்வான்களாக வருவார்கள். தமிழ் வித்வான்கள், தமிழ்ப்பாட்டைப் பாடி இந்த இயக்கத்திலே சேர வேண்டும்.

## கும்பமேளாவுக்கு டிக்கட்டு இல்லை

ஜனவரியில் அலகாபாத்தில் நடக்கும் கும்பமேளாவையொட்டி ஜன. 4உ முதல் பிப்ரவரி 4-ந் தேதி வரை அலகாபாத்துக்கும் அதற்குப் பக்கத்திலும் உள்ள ஸ்டேஷன்களுக்கும் ரயில்வே டிக்கட்டுகள் கொடுக்கப்படமாட்டா என்று இந்திய சர்க்கார் தெரிவித்திருக்கின்றனர். யுத்த நிலைமையை முன்னிட்டு, துருப்புகளை ஏற்றிச் செல்லவும், அபாயப் பிரதேசங்களிலிருந்து ஜனங்களை வெளியேற்றவும் வண்டிகள் தேவைப்படுவதாலேயே இம்மாதிரி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பல இடங்களில் பாசஞ்சர் வண்டிகளைக் குறைக்கவும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

## எது ஜப்பானிய விமானம்?

ஜப்பானியர் இரண்டு வகையான கனத்த வெடி விமானங்களை சாதாரணமாக உபயோகிக்கின்றனர். 'மிட்ஸூ பிஷி 96' என்னும் வகையைச் சேர்ந்தவை கடற்படையைச் சேர்ந்த விமானப் படையினரால் உபயோகிக்கப்படுகின்றன; மிட்ஸூபிஷி 96 விமானங்கள் சைன்யத்தைச் சேர்ந்தவை. இந்த வகை விமானம் நடுவே ஒற்றை இறக்கையுடன் இரண்டு இஞ்சின்களும் இரட்டைச் சுக்கானும் கொண்டது; 10,000 அடி உயரத்தில் மணிக்கு 230 மைல் வேகம் வரை பறக்கும். 'மிட்ஸூ பிஷி 97' விமானமும் இரண்டு எஞ்சின் உடையது தான். ஆனால் இதற்குத் தாழ்வான ஒற்றை இறக்கையும் ஒரே சுக்கானும் தான் உண்டு. 1,500 அடி உயரத்தில் இது மணிக்கு 245 மைல் பறக்கும். இந்த விமானங்களில் ஏற்றக் கூடிய குண்டுகளின் கனம் நிரப்பியிருக்கும் பெட்ரோலின் அளவையே பொறுத்தது. சாதாரணமாக இவை 1500 மைல் போய்த் திரும்ப முடியும்.

எது ஜப்பானிய விமானம் என்று பொதுமக்கள் கண்டு கொள்வதற்காக சர்க்கார் சில தகவல்களை வெளியிட்டிருக்கின்றனர். ஜப்பானிய விமானங்களின் உடலின் பக்க வாட்டிலும் இறகுகளிலும் வட்டமாமாகச் சிவப்பு நிறம் பூசப்பட்டிருக்கும்; பிரிட்டிஷ் விமானங்களில், சிவப்பு, வெள்ளை, நீல நிறங்கள் வட்டமாக ஒன்றைச் சுற்றி ஒன்றாகப் பூசப்பட்டிருக்கும். அடையாளம் தெரியாமல் இருக்க இங்குமங்கும் சிதறினாற்போல இவற்றிற்குக் கறுத்த பச்சை அல்லது காக்கி நிறம் அடித்திருப்பதாகத் தெரிகிறது.

## பிரபுக்கள் சபைக்கு லிபரல்கள் நியமனம்

தொழிற் கட்சிக்காரரில் நான்கு பேர் பிரபுக்களாகச் செய்யப்பட்டிருக்கின்றனர். இந்த ஏற்பாடு அரசியல் துறையில் கௌரவத்திற்காக வல்லவென்றும், தற்சமயம் தேசத்திலுள்ள தொழிற் கட்சியின் பலத்திற்குத் தகுந்தபடி பிரபுக்கள் சபையில் தொழிற் கட்சிக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கும்படி செய்வதற்காகவென்றும் சொல்லப்படுகிறது. நான்கு பேர்களில் ஒருவரான வெட்ஜ்வுட் பென் என்பவர், போன தொழிற் கட்சி சர்க்காரில் இந்தியா மந்திரியாக விருந்தவராவர்.





## தமிழ்ப் பாட்டுப் போட்டி

### செட்டிநாட்டு ராஜா பரிசுகள்

1942 பிப்ரவரி 20, 21, 22 தேதிகளில் நடக்கும் போட்டிக்குத் தமிழ்ப் பாடல்களைச் சமர்ப்பிக்கும்படி அண்ணாமலை யுனிவர்ஸிட்டி, பாடல் இயற்றுவோரைக் கேட்டுக்கொள்ளுகிறது. ஜனவரி 22-ந் தேதிக்குள் 6 பாட்டுகள் அவற்றின் குறியீடுகளுடன் (Notations) அனுப்ப வேண்டும். போட்டியில் இவற்றில் நான்கு பாட்டுக்கள் பாடப்படவேண்டி யிருக்கும். (1) ராக அல்லது தாளத்தின் அருமைக்கும் அல்லது பாட்டு அல்லது பாட்டுகளின் அழகுக்கும் (2) ராகமாலிகை, தாளமாலிகை, ராகதாளமாலிகை, சப்த தாள சுரமாலிகை இந்த மாதிரி அமைப்புகளுக்கும் (3) ஏற்கனவே தமிழ் சங்கீதத்தில் போதிய அளவு காணப்படாத வர்ணம், கீதம், பதம், தில்லானா, கீர்த்தனங்கள் போன்ற மாதிரிகளுக்கும் (4) மெட்டின் கற்பனாசக்தி, துறையின் புதுமை, அதைக் கையாளும் முறை, பாட்டுக்களில், உபயோகிக்கப்படும் பாஷையின் தன்மை ஆகியவைக்கும் விசேஷமாகக் கவனம் செலுத்தப்படும். இயற்கை அழகு வர்ணனை, விவசாயம், கைத்தொழில், வியாபாரம், வாணிபம். தேச பக்தி இவை பற்றிய பாட்டுக்களைத் தயாரிக்கலாம். மொத்தம் ரூ. 200, 150, 125, 125, 100, 100 கொண்ட 6 பரிசுகள். அண்ணாமலை சர்வ கலாசாலை ரிஜிஸ்திராரிடமிருந்து பூரண விவரங்களையும் தெரிந்து கொள்ளலாம் என்று அறிவிக்கப்படுகிறது. இந்தப் பரிசுகள் கனம் செட்டிநாடு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் உதவிய நிதியிலிருந்து அளிக்கப்படுகின்றன.

## பாதுகாப்புச் சட்டக் கைதிகள் விடுதலை

பாதுகாப்புச் சட்டப்படி தண்டிக்கப்பட்ட கைதிகள்பற்றிய பரிசீலனையை சென்னை சர்க்கார் முடித்துக்கொண்டுவிட்டதாக ஒரு அறிக்கை கூறுகிறது. மொத்தம் தண்டிக்கப்பட்ட 579 பேரில் 346 பேர் விடுதலை பெற உத்தரவிடப்பட்டுள்ளனர். இன்னும் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருப்போரை சர்க்கார் இருபிரிவாகப் பிரித்திருக்கின்றனர். (1) பலாத்கார முறையைத் தூண்டும்படியான புரட்சிப் பிரசுரங்களையும், செய்திகளையும் வைத்துக் கொண்டோ அல்லது விநியோகித்தோ தண்டனைக் குள்ளானவர்கள்: (2) சத்தியாக்ரம் செய்து ஒழுங்கீனம், வரிகொடாமை முதலியவற்றைக் கிளப்பி சர்க்காருக்கு எதிரான துவேஷத்தை உண்டாக்கியதற்காகத் தண்டனை யடைந்தவர்கள். இரண்டாவது பிரிவினர் நன்னடக்கையுடன் இருப்பதாக உறுதி கூறினால் அவர்களையும் விடுவிக்க உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது.

## நேரு, ராஜாஜி, ஸவர்க்கார், ஜின்னா கொண்ட சர்க்கார்

### 'ஸ்டேட்ஸ்மன்' யோசனை

இந்திய ராஜீய நெருக்கடியை உடனே தீர்க்க வேண்டியது அவசியம் என்று வற்புறுத்தி கல்கத்தா 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை எழுதிய ஒரு தலையங்கத்தில் ஜனாப் ஜின்னா, அவர்களுடைய நண்பர்கள், பண்டித நேரு, ராஜாஜி, ஸவர்க்கார் இவர்களைக் கொண்ட ஒரு சர்க்காரை நியமிக்கும்படி யோசனை கூறி யிருக்கிறது. இதன்படி இந்திய வைஸ்ராய் இந் நாட்டிலேயே தங்கி யிருக்கும் ஒரு மந்திரியாகி விடுவார் என்றும், கெய்ரோவிலுள்ள (எகிப்து தேசத்தின் தலைநகர்) மிஸ்டர் அலிவர் லிட்டில்டனுக்கும், சிங்கப்பூரிலுள்ள மிஸ்டர் டப் கூப்பருக்கும் அளிக்கப்பட்டிருக்கும் அந்தஸ்தை இந்திய வைஸ்ராய் பெறுவார் என்றும், இந்தியா மந்திரிக்கு அடங்கி நடக்க வேண்டிய நிலைமை அவருக்கு அப்போது இருக்காதென்றும் கூறுகிறது. இன்னும், மேற்படி இந்திய சர்க்கார், சட்ட சபைக்கு ஜவாப்தாரியானதாக இல்லாமல் போனாலும், இன்று இங்கிலாந்திலும் யுத்தத்தில் ஈடுபட்டுள்ள மற்ற நாடுகளிலும் உள்ள ஐக்கிய சர்க்காரைப் போன்ற பொறுப்பு அதற்கு ஏற்படும் என்றும் கூறுகிறது.

## கிராம முன்சீபுக்குத் தண்டனை

கலகம் செய்ததாயும், காயப்படுத்தியதாயும் கொக்கரங்கோட்டைக் கிராம முன்சீபு லட்சுமணப் பெருமாள் நாயக்கர், கர்ணம் ராமசாமி லட்சுமணப்பெருமாள் நாயக்கர், கிருஷ்ணசாமி நாயக்கர், மாப்பிள்ளைசாமி நாயக்கர், பொன்னுசாமி நாயக்கர் ஆகியோர் மீது நடைபெற்று வந்த வழக்கில் ராமநாதபுரம் ஜாயின்டு மாஜிஸ்திரேட் ஸ்ரீ ஊஸ்மான் அலி முதல் இரண்டு எதிரிகளுக்கு மொத்தமாக 9 மாதக் கடுங்காவலும், 3ம் 4ம் எதிரிகளுக்கு 8 மாதக் கடுங்காவலும், 5ம் எதிரிக்கு 4 மாதக் கடுங்காவலும் விதித்தார்.

## உணவுப் பொருள் விலைவாசிகள்

### சர்க்கார் அறிக்கை

சென்னை சர்க்கார் உணவுப் பொருள்களின் விலைவாசிகள் உயர்வு சம்பந்தமாக வெளியிட்டுள்ள அறிக்கையில் வியாபாரிகள் அமித லாபம் கருதி நியாயமற்ற முறையில் பண்டங்களை விற்றால், தீவிரமான கட்டுப்பாட்டுத் திட்டங்களைச் சர்க்கார் எடுக்க நேரும் என எச்சரித்திருக்கின்றனர். ஜப்பான் யுத்தத்தில் இறங்கியதால் மார்க்கெட்டின் நிலைமை பாதிக்கப்பட்டிருந்தாலும், அரிசி விலை இறங்க ஆரம்பிக்கும் அறிகுறிகள் காணப்படுவதாலும், மற்ற முக்கிய பண்டங்கள் இம்மாகாணத்தில் போதிய அளவுக்கு இருப்பதாலும், புதிய சரக்குகள் மார்க்கட்டுகளுக்கு சில தினங்களில் வந்து விடுமாகையாலும் ஜனங்கள் பீதியும் குழப்பமும் அடையாமல் ஆங்காங்கு நிறுவப்பட்டுள்ள விலை நிர்ணயக் கமிட்டியின் ஆலோசனைப்படி வியாபாரிகள் பண்டங்களை விற்கவேண்டு மென்றும் தெரிவித்திருக்கிறார்கள். மொத்த வியாபாரிகளிட மிருந்து ஒவ்வொரு வாரமும் நெல், அரிசி இவை எவ்வளவு ஸ்டாக் இருக்கிற தென்பதற்கு எழுதப்பட்ட வாக்குமூலம் வாங்கும்படி கலெக்டர்களுக்கு உத்தரவிட்டிருக்கின்றனர். விலை நிர்ணய ஆலோசனைக் கமிட்டியார் நிர்ணயித்த விலைவாசிகள் ஜாப்தாவை சில்லறை வியாபாரிகளிடத்திலும் பொது மக்களிடத்தும் விநியோகிக்கும்படியும், ஷை விலைக்கு விற்பதாகப் பிரசித்தப்படுத்திய கடைகளில் பொதுமக்கள் பண்டங்களை வாங்கும்படி சொல்லவும், இன்னும் ஷை விலையை அனுசரியாத பிரதேசங்களில் சில்லறை டிபோக்களை ஏற்படுத்துவது சம்பந்தமாக யோசிக்கும்படியும் உத்தரவிடப்பட்டிருப்பதாக அறிக்கை கூறுகிறது.

## புதுக்கோட்டையில் சர்க்கார் ஏற்பாடு

விலைவாசிகளைக் கட்டுப்பாடு செய்ய, பொன்னமராவதி, திருமயம், அரிமளம், ஆலங்குடி, கீரனூர் ஆகிய ஊர்களுக்குப் போலீஸார் அனுப்பப்பட்டிருக்கின்றனர். இவர்கள் நியாயமான விலைக்குப் பண்டங்கள் விற்கப்படுவதைக் கவனிப்பார்கள். முக்கிய வியாபாரிகளை கான்பகதூர் பி. கலிபுல்லா சாகிபு கண்டு உணவுப் பொருள்களை அனேகமாகக் கொள்முதல் விலைக்கே விற்கும்படி சொல்லியிருக்கிறார்.

## மதிப்புரை

### மாதவி

[ஆசிரியர்: ஸ்ரீ சரத் சந்திர சாட்டர்ஜி. மொழிபெயர்ப்பாசிரியர்: ஸ்ரீ எம். வி. வெங்கடராமன். பிரசுரித்தோர்; நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், சென்னை. பக்கம் 91 விலை; 12 அணா.]

யம். ஏ. பாஸ் செய்தும், உலக விஷயங்களைத் தெரிந்து கொள்ளாத ஒரு வாலிபனையும், அன்பே உருவாயமைந்த மாதவி யெனும் இள விதவையையும்பற்றிய ரசமான கதை. சோகத்தில் முடிந்து விட்டபோதிலும், மனதைக் கரைக்கும் முறையில் கதைப்போக்கு அமைந்திருக்கிறது. மனோ உணர்ச்சிகள் நன்கு சித்தரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

### தமிழர் திருமணமுறை தமிழர் கருமாதி முறை

திரு. ஏ. சி. பாலசுந்தர நாயகர் பி. ஏ., எல். டி., அவர்களால் ஆக்கப் பெற்ற நூல்கள். புரோகிதரின்றி சுபா சுப காரியங்களை நடத்த உதவுவன. சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் ஏற்றவாறு தனித்தனி தயாரிக்கப்பட்டிருக்கின்றன. தேவார திருவாசகம், நாலாயிரப் பிரபந்தம் முதலியவற்றிலிருந்து சடங்குகளுக்கேற்ற பாடல்கள் பொறுக்கித் தரப்பட்டிருக்கின்றன. திருமண முறை ஒவ்வொன்றும் விலை அணா 3; கருமாதி முறை ஒவ்வொன்றும் விலை அணா 2.

## காலண்டர் வரவு

மதுரை சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (லிமிடெட்) வெளியிட்டுள்ள 1942-ம் வருஷத்து காலண்டர் வரப்பெற்றோம். 2 மாதங்கட்கு ஒரு தாள் வீதம் ஆங்கில, தமிழ் மாதத் தேதிகளுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. முக்கிய பண்டிகை, விடுமுறை தினங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

## மதுரை ஆலயப் பிரவேச வழக்கு

வாதிகளும் பிரதிவாதிகளும் பற்பல சமூகங்களும் கோவிலுக்குள் எதுவரைப் போகலாம் என்பதுபற்றி பழக்கவழக்க நடைமுறைகளை விளக்கும் வாக்குமூலங்களைத் தாக்கல் செய்துவிட்டனர். ஜனவரி 17-உ விவாதம் ஆரம்பமாகும்.

ஹைதராபாத் சமஸ்தானத்தில் பல நகரங்களிலும் கிராமங்களிலும் இந்து கோயில்களும் பள்ளிகளும் அடுத்தடுத்து இருக்கின்றனவாம். நூற்றுக்கு மேற்பட்ட முஸ்லீம் ஸ்தாபனங்கள் இந்துக்களால் நிர்வகிக்கப்பட்டு வருகின்றனவாம்.

பர்மாவில் நடக்கும் சம்பவங்களைப்பற்றித் தங்களுக்குச் சரியான தகவல்களைத் தெரிவிக்கும்படி சென்னை சர்க்கார் இந்திய சர்க்காருக்கு எழுதியுள்ளனர்.



## மலேயாவில் ஜப்பானிய நோட்டுகள்

மலேயாமீது படையெடுத்துள்ள ஜப்பானியத் திருப்புகளுக்கு மலேயாவில் உபயோகமாகக்கூடிய செலாவணி நோட்டுகள் ஏராளமாக வழங்கப்பட்டிருக்கின்றனவாம். இவை ஜப்பானில் அச்சடிக்கப்பட்டவை. இந்தக் கள்ள நோட்டுகளை ஜனங்கள் ஏற்கக்கூடாதென்றும் ஏற்பவர்கள் ஜப்பானியர்களின் ரகசிய ஏஜண்டுகளாகக் கருதப்படுவார்களென்றும் போலீஸார் எச்சரிக்கை செய்திருக்கின்றனர்.

## சேது ரெகுநாத பட்டணம் பொதுஜன சேவா சங்கம்

17-11-41 அன்று இவ்வூர் பொதுஜன சேவா சங்க அங்கத்தினர்களின் கூட்டம் சங்க மண்டபத்தில் கூடி புது ஆண்டுக்கு தலைவராகத் திரு சேவு. ராமனுதன் அம்பலம் அவர்களையும், காரியதரிசியாக திரு முரு. மு. முருகப்பா அவர்களையும், உப காரியதரிசியாகத் திரு ஏ. மு. க. இராமநாதன் அவர்களையும் தேர்ந்தெடுத்தது.

## வெடிகுண்டு விமானங்களைச் செய்ய இந்தியக் கம்பெனிக்கு ஆர்டர்

சமீபத்தில் நடந்த பார்லிமெண்டின் காமன்ஸ் சபைக் கூட்டத்தில் மிஸ்டர் அமென் இந்தியாவில் பாதுகாப்புபற்றி கேள்வி கேட்டார். அதற்கு இந்தியா மந்திரி அளித்த பதிலில், இப்பொழுது இந்தியாவிலுள்ள சிவில் பாதுகாப்புப் படைகளை வலுப்படுத்த சாத்தியமான ஏற்பாடுகள் நடந்துவருவதாக உரைத்தார்.

பிரிட்டிஷ் விமான உற்பத்தி இலாகா மந்திரிக்குச் சட்டசபைக் காரியதரிசியான மிஸ்டர் ப்ரெடரிக் மாண்டேகு வெடிகுண்டெறியும் விமானங்கள், பயிற்சி யளிக்க உதவும் விமானங்கள் ஆகியவைகளுக்குப் போதிய அளவுக்கு ஒரு இந்தியக் கம்பெனிக்கு ஆர்டர் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிவித்தார். இந்தியாவில் யுத்த சப்ளை உற்பத்தியில் அரசியல் அல்லது ஏகாதிபத்ய நோக்கங்கள் குறுக்கிட அனுமதிக்கவில்லை என்றும் கூறினர்.

## திருப்பத்தூர் தாலுகாவில் விலைவாசி நிர்ணயம்

திருப்பத்தூர் தாலுகா விலை நிர்ணயக் கமிட்டி 23—12—41-ல் நிர்ணயித்த விலைகளின் ஜாப்தா:—

| | | | |
|---|---|---|---|
| அரிசி முதல் தரம் நெல்லூர் சம்பா | ரூ. 1-க்கு | படி | 3 |
| 2-வது தரம் | ,, | ,, | 4 |
| முதல் தரம் மல்லிகைச் சம்பா | | ,, | 3⅝ |
| புழுங்கல் அரிசி முதல் தரம் | | ,, | 4 |
| கேப்பை | ,, | ,, | 11 |
| பருப்பு முதல் தரம் | ,, | ,, | 3¾-4 |
| உளுந்தம் பருப்பு | ,, | ,, | 3¼-3⅜ |
| பாசிப்பருப்பு | ,, | ,, | 3¾ |
| கடலைப்பருப்பு | ,, | ,, | 3¾ |
| கடலை | ,, | ,, | 4⅛ |
| உப்பு | ,, | ,, | 9½ |
| மல்லி | ,, | ,, | 8 |
| பழுப்பு சீனி | வீசை 1-க்கு | ரூ | 0-8-0 |
| சர்க்கரை | ,, | ,, | 0-3-6 |
| அஷ்டகிராம் சீனி | ,, | ,, | 0-8-6 |
| மிளகாய் வத்தல் சம்பா | ,, | ,, | 0-8-6 |
| தீப்பெட்டி | | 1-க்கு | 0-0-5 |
| திருப்பூர் 4 முழம் வேஷ்டி | | 1-க்கு | 0-10-9 |
| மண்ணெண்ணெய் பாட்டில் | | 1-க்கு | 0-3-0 |
| கரி மூட்டை | 1-க்கு | ரூ | 1-7-0 |

## திருவாடானைத் தாலுகாவில் விலைவாசிகள் நிர்ணயம்

ஷை தாலுகா விலை நிர்ணயக் கமிட்டியார் சமீபத்தில் கூடி நிர்ணயித்த விலைகளின் ஜாப்தா நமக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. ஆனல் அது தெளிவாக எழுதப்படாததால் பிரசுரிக்க முடியாமைக்கு வருந்துகிறோம். (ப—ர் 'குமரன்')

## சென்னையில் ஊர்காப்புச் சங்கம் நியமனம்

டிசம்பர் 21-ந் தேதி ஸ்ரீ டி. ஆர். வெங்கடராம சாஸ்திரி தலைமையில் நடந்த கூட்டத்தில் பாதுகாப்பும், கஷ்ட நிவாரணமும் அளிப்பதற்கும், குழப்பம், கலவரம் முதலியவற்றைத் தடுப்பதற்கும் ஊர்காப்பு சங்கம் ஒன்று நிறுவப்பட்டது.

## நோட்டீஸ்

### தேவகோட்டை சப் கோர்ட்டு

S. C. No. 134 of 1941

பள்ளத்தூர் சு. சித. அள. ராமசாமி செட்டியார் ஷையார் பவர் ஏஜண்டு ராமசாமி செட்டியார் மூலம் வகையரு } வாதிகள்

Vs

தற்காலம் F.M.S.ஐ சேர்ந்த ஈபோவிலிருக்கும் காரைக்குடி பொசலவேளார் மகன் ராமசாமி வேளார் } 2-ம் பிரதிவாதி

ஷை 2-ம் பிரதிவாதிக்குத் தெரிவிப்பதாவது:—

தங்கள் தகப்பனுருக்கும் ஷையார் சகோதாருக்கும் கூட்டாயுள்ள M. P. பொசல வேளார் & Bros. கடைக்காக 19-10-38ல் ரூ 614-9-3 வாதிகளிடம் பெற்றுக்கொண்டு ஷையார்களுக்கு எழுதிக் கொடுத்திருக்கும் பிராம்சேரி நோட்டின்படி கிடைக்க வேண்டிய தொகை ரூ 752—1—3ஐ வசூலிக்க வாதிகளால் உங்கள் பேரில் ஷை நிம்பரில் வியாஜ்ஜியம் செய்து அதன் பைசலுக்காக 9—1—1942ல் வாய்தா ஏற்பட்டிருக்கிறது. அன்று தினம் நீங்கள் ஆஜராகி உங்கள் எதிர் வாதத்தைத் தெரியப்படுத்திக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் எக்ஸ்பார்ட்டி செய்யப்படும்.

R. சத்யமூர்த்தி அய்யர்,
வாதிகள் வக்கீல்.

தேவகோட்டை, 24—12—41.





Edited, Printed and Published by S. MURUGAPPA for DhanaVysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S.INDIA)

